# ஸ்ரீ சங்கர விஜயம்



பிரசுரம் :
கணேஷ் அண்டு கம்பெனி (மதராஸ்) பிரைவேட் லிமிடெட்
மதராஸ்—17

# ஸ்ரீ சங்கர விஜயம்



## தெய்வ வணக்கம்

श्रीचन्द्रमौलीश्वरायनमः

गामाक्रम्य पदेऽधिकाञ्चि निबिडं स्कन्धैश्चतुर्भिस्तथा
व्यावृण्वन् भुवनान्तरं परिहरंस्तापं समोहज्वरम् ।
यश्शाखी द्विजसंस्तुतः फलतितत्स्वाद्यं रसाख्यंफलं
तस्मै शंकरपादापाय महते तन्मस्त्रिसन्ध्यंनमः ॥

ஸ்ரீ காஞ்சி க்ஷேத்திரத்தில் வேரூன்றி, தன் சிஷ்யர்களாகிய நான்கு அடர்ந்த கிளைகளால் பூலோகமெங்குமளாவி, வேறு லோகங்களிலும் பரவி, மோகம் (மாயை) என்னு முபாதியா லுண்டாகுந் தாபத்தைத் தன் நிழலால் போக்கடிக்கக் கூடியதும் வேதசாகைகளாகிய கிளைகளடர்ந்தோங்கி வேதியர்களென்னும் பறவைகளால் துதிக்கப்பெற்றதும், இனிய ஆத்மரஸ மென்னும் கனியைக் கனிவிப்பதுமான ஸ்ரீ சங்கரரென்னும் மஹா விருக்ஷத்திற்குத் திரிஸந்தியா காலங்களிலும் நமஸ்கரிக்கின்ரேம்.

श्रीचन्द्रमौलीश्वरायनमः

## அத்தியாயம் 1

### ஸ்ரீ சங்கரருடைய அவதார காரணம்

ஆஸ்திகர்களாய் சைவம் வைஷ்ணவம் முதலிய ஆறு மதங்களைச் சார்ந்து ஹிந்துக்க ளென வழங்கும் நம்மெல்லோருக்கும் ஒரே லோக குருவாய் அவதரித்து, **ஸ்ரீ சங்கராச்சாரியரெனத்** திருநாமம் பூண்ட ஈசனது திவ்ய சரித்திரத்தை யும், அவரது மூலபீடமாகிய ஸ்ரீ காமகோடி பீடத் தின் விசேஷத்தையும், மகிமையையும் நாமெல் லோரும் அறிந்து, நம்மை கிருதார்த்தர்களாகச் செய்துகொள்ள வேண்டுவது முற்றிலு மவசியம். முன்னொருகால் ஸ்ரீ கைலாசகிரியில் பரமேசுவரன், சித்த, சாரண, கின்னர, கிம்புருஷ, கந்தர்வ முதலிய கணங்களால் சூழப்பெற்று, ஜகன்மாதா வாகிய உமாதேவியுடன் வீற்றிருக்கையில், பிரம் மாதி தேவதைகள் அச்சிவபெருமானுடைய ஸன்னிதானத்தை யடைந்து, கலியிலே இப்பூலோ கத்தில் ஏற்பட்ட கொடிய அதர்மங்களை யறிவித்து, "ஹே லோகநாத! தாங்களே புவியில் அவதரித்து ஜனங்களுக்கு ஞானத்தை உபதேசித்து வேத தத்துவத்தை விளக்கி, அஞ்ஞானத்தைப் போக்கி, அதர்மத்தை நீக்கி, தர்மத்தை நிலைநாட்ட வேண்டும்" என்று பிரார்த்தித்தனர். ஈசனும் புன்னகை கொண்டு "அங்ஙனமே யாகுக"வென, அனுக்கிரகித்தனுப்பினர். பிறகு பிரம்மதேவரை **மண்டனமிச்ரர்** என்ற நாமதேயத்துடன் பூர்வ மீமாம்ஸா சாஸ்திரத்தின் முக்கிய கருத்தான கர்ம

மார்க்கத்தைப் பூலோகத்தில் பிரசாரஞ் செய்யக் கட்டளையிட்டு, ஸ்ரீ மஹாவிஷ்ணுவையும் சுப்பிரமண்யக் கடவுளையும் முறையே பத்மபாதராகவும், குமாரிலபட்டராகவும், அவதரிக்கச் செய்து, தமது அவதாரத்துக்கு உதவியாயிருக்கும் வண்ணம் ஆக்ஞாபித்தருளினர்.

ஸ்ரீ சிவபெருமான் ஆச்சாரிய ரூபமாக இப்புவியில் தோன்றினர் என்பதற்கு ஆதாரமாக வேதத்தின் நடுநாயகமான ஸ்ரீ ருத்திரம் 'नमः कपर्दिनेच व्युप्तकेशायच' என்று கூறுகின்றது. ஸ்ரீ ருத்திர பாஷ்யத்திலும், இம்மந்திரத்திற்கு 'चतुर्भिस्सह शिष्यैस्तु शंकरोऽवतरिष्यति' என்ற புராணவசனம் உபப்பிரமாணமாக நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. மேலும் ஸ்ரீ சிவரஹஸ்யத்தில்

"केरलेशशलग्रामे विप्रपत्न्यां मदंशतः।

भविष्यतिमहादेवि शंकराख्यो द्विजोत्तमः"॥ எனவும்,

ஸௌர புராணத்தில் 'शंकरस्सवितानन:' எனவும்,

இலிங்க புராணத்தில்

कलौरुद्रोमहादेवः शंकरोनीललोहितः।

प्रकाशते प्रतिष्ठार्थं धर्मश्चाविकृताकृतिः" எனவும்,

கூர்ம புராணத்தில்

"करिष्यत्यवतारं स्वं शंकरोनीललोहितः।

श्रौतस्मार्तप्रतिष्ठार्थं भक्तानां हितकाम्यया"॥ எனவும்,

கூறப்பட்டுள்ளன.

## சிவகுருவின் தவம்

நமது ஆதிலோககுருவான ஸ்ரீ சங்கரபகவத் பாதாச்சார்யர் **கேரள** தேசத்தில் ஆவிர்ப்பவித்தார்.

**காலடி** என்னும் ஒரு கிராமத்தில் சிவகுரு வென்னும் ஒரு பிராம்மணோத்தமரிருந்தார். அவருடைய தர்மபத்தினிக்கு நாமதேயம் "**ஆர்யாம்பிகா**". அவ்வம்பிகைக்கு "**சிவ தாரகை**" யென்ற மற்றொரு பெயருமுண்டு. இவ்விருவரும் எல்லாவித பாக்கியங்களையும் பெற்றிருந்தும், புத்திரப்பேறில்லாது, விருஷ பாசலமென்னும் க்ஷேத்திரத்தின் கண்ணுள்ள ஸ்ரீ பரமேசுவரனைச் சரணமடைந்து, அதிபக்தியுடன் தவம் புரிந்தனர். எம்பெருமானும் அத்தம்பதிகளின் தவத்தில் ஈடுபட்டவராய் அவ்வந்தணரின் கனவில் பிரஸன்னமாகி "ஹே பக்த! உனது தவத்தினால் நான் நிரம்பவும் சந்தோஷமடைந்தேன். உனக்குப் புத்தியில்லாதவர்களாயும், தீர்க்காயுளைப் பெற்றவர்களாயுமுள்ள நூறு புத்திரர்கள் வேண்டுமா? அல்லது ஸர்வக்ஞனாயும் எட்டு வயது ஆயுளுள்ளவனாயுமுள்ள ஒரே புதல்வன் வேண்டுமா?" என வினவினார். உடனே சிவகுரு விழித்துக்கொண்டு தனது பத்தினியிடம் இச்செய்தியைச் சொல்ல, அவ்வம்மையும் "ஹே நாதா! எவ்விதமிருப்பினும், மூடாளாகிய நூறு மக்களைப் பெறுதலினும் சர்வக்ஞனான ஒரு புதல்வனை யடைதலே நமக்குப் பெருமை யாதலால், அந்த ஒரே மைந்தனைத்தான் அடையவேண்டும்" என்று பதில் தந்தனள்.

பிறகு இருவரும் ஸ்ரீ சிவஸன்னிதானத்தை யடைந்து, அவ்வாறே பிரார்த்திக்கலாயினர். உடனே ஓர் அசரீரி "ஸர்வக்ஞனுகிய யானே உங்களுக்குக் குழந்தையாக அவதரிக்கப்போகின்றேன்" என வாக்களிக்க, சிவகுருவும் ஆர்யாம்பிகையும் காலடிக்குத் திரும்பினர். திரும்பித் தங்களது இல்லம் சென்று தாம்செய்த தவத்திற்கு உத்திராங்கமாக ஒரு பெரிய பிராம்மண ஸந்தர்ப்பணை செய்து ஈசுவரஸ்வரூபமான வேதியரின் உச்சிஷ்டத்தை அதிபக்தியுடன் உண்டார்கள். அதன் மூலமாகவே ஈசுவர தேஜஸ் அவர்களது உதரத்தில் பிரவேசித்தது.

## ஆச்சாரிய அவதாரம்

"ईशानः सर्वविद्यानां" என்று வேதத்தில் கூறப்பட்டபடி எல்லா வித்தைகளுக்கும் அதிபதியான ஸ்ரீபரமேசுவரன் உலகில் அவ்வித்தைகளுக்கும் தத்துவங்களை விளக்கும் பொருட்டு, கலி 2593-வது (509 கி. மு.) நந்தன வருஷம், வைசாக மாதம், சுக்ல பக்ஷம், பஞ்சமி, புனர்வஸூ நக்ஷத்திரம், அபிஜின் முகூர்த்தத்தில் சிவகுருவின் பத்தினியான ஆர்யாம்பிகையின் உதரத்திலிருந்து குழந்தை வடிவமாக உதித்தார்.

"तिष्येप्रयात्यनलशेवधिवाणनेत्रे यो नन्दने दिनमणावुदगध्वभाजि" என்னும் பிராசீனபத்தியமும் இக்காலத்தையே குறிக்கின்றது.*

---

* தற்காலத்தில் கால விமர்சகர்களனேகர், ஸ்ரீ சங்கரருடைய ஜனன காலத்திற்கு வேறு வித்தியாசமான காலங்களைக் குறிப்பிடினும், ஸ்ரீ ஜகன்னதம், துவாரகை, ஸ்ரீ காமகோடி பீடம் இந்தப் பீடங்களின் குருபரம்பரா கிரந்தங்களும், சிவ

ஸர்வக்ஞுனை புத்ரன் அவதாரமானவுடன் சிவகுரு மிகுந்த ஆனந்தமடைந்தவராய் ஸமீபத்தில் ஓடும் "சூர்ணீ" என்னும் நதியில் விதிப்படி நீராடினுர். பிறப்பில்லாத ஆதி புருஷனுக்கும் ஜாத கர்மம் நடைபெற்றது. நாமகர்ணமும் நடைபெறவேண்டியிருந்ததால், சோதிடரைக் கொண்டு என்ன நாமம் இடலாமென்ருலோசித்ததில், ஜன்ம மாதம், பக்ஷம், திதி இவைகள் 2, 1, 5 என்ருக கடபயாதிகணணத்தினுல் தலைகீருக மாறி சம்-க-ர என்று ஏற்பட, அந்நாமத்தையே அக்குழந்தைக்கு இடவேண்டுமென்று யாவரும் அபிப்ராயங் கொண்டனர். அவ்வாறே '**சங்கரன்**' என்ற நாமம் ஏற்பட்டது. ஈசனது திருநாமமும் இஃதேயன்ருே? இவ்வவதாரத்திற்குப் பொருந்திய திருநாமமும் இதுவே. நாமதேயத்திற்குப் பொருள் யாதெனில் சம் - ஸுகத்தை; கரோதி - அருளுகின்ருர் என்பது. ஆகையால் அவர் எல்லா ஜீவராசிகளுக்கும் ஸுகத்தை யளிக்கும் மூர்த்தியாகிருர்.

## அத்தியாயம் 2

### வித்தியாப்பியாஸம்

இங்ஙனம் முறைப்படி எல்லாம் நடைபெற, நமது குருபாலரும் வளர்பிறை போல, நாளுக்கு நாள் விருத்தியடைந்து வந்தார். மூன்ருவது

---

ரஹஸ்யத்தில் "सहस्रद्वितयात्परं" "ஸஹஸ்ர-த்விதயாத்பரம்" என்கிற வசனமும், நேபாள தேசத்திலுள்ள அநேக சிலா சாஸனங்களும், கிறிஸ்து வருஷங்களுக்கு முன்னரே நமது ஆசாரியர் அவதாரமானுர் என்பதை நன்கு தெரிவிக்கின்றன.

வயதிற்குள் உலகிலுள்ள எல்லா பாஷா ஞானங்களும் அவரிடம் தாமாகவே அமைந்தன. ஐந்தாவது வயதினாரம்பத்திலேயே வேதங்களைத் தவிர மற்ற சாஸ்திரங்களெல்லாம் நமது குருநாதனை வந்தடைந்து விட்டன. வேதங்களோ "அன்னவரையடையும் நாள் நமக்கென்றைக்குக் கிடைக்குமோ" என்று அதிக ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தன. இச்சமயம் தந்தையான சிவகுரு சிவ ஸாயுஜ்யமடையலானார். ஆர்யாம்பிகையும் உறவினரின் உதவியைக்கொண்டு தனது குமாரனுக்கு ஐந்தாவது ஆண்டிலேயே உபநயனமும் செய்வித்தாள். எல்லா வித்தைகளுக்கும் ஈசனும், வேதங்களையே சுவாசமாக வுடையவனுமான பரமனுக்கு வேதங்களைக் கற்றறியவும் வேண்டுமோ? ஆயினும் லோகானுக்கிரஹமாக சாஸ்திர விதிகளைத் தாமாகயே யனுஷ்டித்துக் காட்டவேண்டியதற்காக குருகுலத்தை யடைந்து, நான்கு வேதங்களையும் நான்கு உபவேதங்களையும், ஆறு வேதாங்கங்களையும்,ஆறு உபாங்கங்களையும் தம்மையெளிதிலடையச் செய்தார். சங்கரரின் பிரம்மச்சரிய காலத்தில் உபமன்யு, ததீசி, கௌதமர், திரிதலர், அகஸ்தியர் முதலிய மஹரிஷிகள் ஈசனும் ஆச்சாரியருமான மூர்த்தியைத் தரிசித்து, அநுக்ரஹம் பெற்றுச் சென்றனர். குருகுல வாஸஞ் செய்யுங் காலத்தில் நமது குருமூர்த்திக்கு, சமீப கிராமத்தில் வசித்துவந்த பரம தரித்திரனான ஓர் அந்தணனிடங் கருணை யுதித்தது. ஒரு துவாதசி தினத்தன்று அந்தப் பிராமணருடைய இல்லத்திற்குப் பிக்ஷைக்கேகினார். அவ்வேதியரோ உஞ்சவிருத்திக்காக (உபாதானம்) வெளியே சென்

றிருந்தார். அவரது தர்ம பத்தினியோ, பிரம்மச் சாரிக்குப் பிக்ஷயளிக்க ஒன்றுமேயகப்படாது மனம் நொந்தவளாய்த் தவித்துக்கொண்டு நின்றனள். 'தேஹி' 'தேஹி' என்னும் குருமூர்த்தியினுடைய வசனங்களைக் கேட்க மனம் ஸகியாதவளாக, முதல்நாள் தன் கணவனுல் கொண்டுவரப் பட்ட ஓர் அழுகின நெல்லிக்கனியைத் தேம்பித் தேம்பிக் கண்ணீர்விட்டுக் கொண்டு அக்குஞ்சர மூர்த்தியின் கரத்திலீந்தனள். கருணைவள்ளலான அப்பெருமானுக்கு மனம் இளகியது. உடனே அவர் ஸ்ரீ மஹாலக்ஷ்மியைத் துதித்தார். பூமகளும் பிரஸன்னமாகி, நமதாச்சாரிய மூர்த்தியின் வேண்டுகோளுக்கிணங்கி, அந்த ஏழையின் வீடு முழுவதும் நெல்லிக்கனி யளவுள்ள சுவர்ண (தங்கம்) நெல்லிக் கனிகளை ஒரு முகூர்த்த காலம் வருஷித்தருளினுள். அந்தத் துதியே இன்றைக்கும் **கனகதாரா ஸ்தோத்திரம்** என்று வழங்கி வருகிறது.

अंगं हरेः पुलकभूषणमाश्रयन्ती
भृंगांगनेव मुकुलाभरणं तमालम् ।
अंगीकृताखिलविभूतिरपांगलीला
मांगल्यदाऽस्तु ममंगलदेवतायाः ॥

இந்த ஸ்தோத்திரத்தில் இதைப்போல் இன்னும் பதினெட்டுத் துதிகள் அடங்கி யிருக்கின்றன. இன்றைக்கும், ஏழ்மையை விலக்குவதற்காக இக் கனகதாரா ஸ்தோத்திரத்தை ஜபிக்கிற பெரியோர்களை நாம் காணலாம்.

## ஸன்யாஸமடையத் தாயின் அனுமதி பெறல்

இங்ஙனம் சங்கரருக்கு எட்டாவது வயது வருவதற்குள் வேத முதலாகவுள்ள எல்லா வித்தைகளும் வலுவில் வசமாய்விட்டன. பிறகு நமது குருநாதர் தமது குருவின் அனுமதி பெற்று, அன்னையை யடைந்தார். தாம் கைக்கொண்ட லோகானுக்கிரஹ விரதத்தை நிறைவேற்றும் பொருட்டு, அதற்குச் சாதகமாயுள்ள ஞானசிரமமான துரீயாசிரமத்தையடைய நமது குருநாதருக்கு எண்ணமுண்டாய் விட்டது. அன்னையோ, உலகெலாம் புகழும் தன் புதல்வனுக்கு, விவாகத்தை நடத்திக் கண்குளிரப் பார்த்து ஆனந்தமடைய வேண்டுமென்ற கருத்துடன், எப்போதும் விவாகப் பிரஸ்தாபத்தையே செய்து வந்தாள். நமதீசனுக்கோ அன்னையின் அபிப்பிராயத்திற்கு விரோதமாக ஒரு வார்த்தையும் சொல்ல மனந் துணியவில்லை. அத்தறுவாயில் ஒரு நாள் தமது அன்னைக்குச் சற்று உடம்பு அசௌகரியமடைந்தது. அதனால் நீராட சூர்ணீ நதிக்குப் போக முடியவில்லை. அது கண்ட திருமகன் தனது இல்லத்தின் சமீபத்தில் அந் நதியை வரும்படி பிரார்த்தித்தார். அப்படியே **ஆல்வாய்** என்னும் அந்தச் சூர்ணீ நதி வீட்டின் வாயிலிலேயே ஓடவாரம்பித்தது. நமது குருமூர்த்தி தமது தாய்க்கு ஸ்நானஞ் செய்துவைத்துத் தாமும் அந்நதியில் நீராட இறங்கவே, திடீரென ஒரு முதலை அன்னவரின் திருப்பாதத்தைப் பிடித்துக் கொண்டது.

ஆறோ பூர்ணப் பிரவாஹத்தை யடைந்திருக்

கிறது. தனது புத்திரனை முதலை பிடித்துவிட்ட தெனவறிந்த தாயோ, ஹா! வென அலறுகின்றுள். முதலையோ, நமது பால குருபெருமானின் துடை வரையில் விழுங்கிவிட்டது. உடனே நமதாச்சாரிய மூர்த்தி தமது தாயைப் பார்த்துப் பின்வருமாறு விக்ஞாபித்தார். 'அன்னையே! எனக்கு ஆதியிலேற்பட்ட வயது எட்டுத்தான். இன்றைக்கோ என்னை முதலை பிடித்துவிட்டது. நான் இப்பொழுதே மரிப்பேனுகில், உனக்குப் புத்திர க்ருத்தியம் இல்லாமற் போய்விடும்; எனக்கும் துர்மரணம் ஏற்பட்டுவிடும். அகையால் இச்சமயம் நான் ஸன்யாஸம் எடுத்துக்கொண்டு மரிப்பேனுயின், எனக்கு 'விதேககைவல்யம்' கிடைக்குமென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. அதனுல் நமது குலத்தின் இருபத்தொரு தலைமுறைகளும் மோக்ஷமடைகின்றன. தவிர உனக்கும், புத்திரக்ருத்தியத்தைக்காட்டிலும்மிகப்பெரிதானமோக்ஷம் ஏற்படுகிறது. மேலும் ஸன்யாஸம் பெற்றுல் மறுஜன்மம் என்று கூறுவர். ஆகையால் இஜ்ஜன்மத்தின் அல்ப ஆயுள், ஸந்யாஸத்தால் முதலையும் விழுங்காமல் இன்னும் எட்டு வயது அதிகமாக ஏற்படினு மேற்படும். அன்னையே! நான் துர்மரணமாக மரிக்க வேண்டாமென்று உனக்கிருந்தால், தயவு செய்து எனக்கு ஸன்யாச ஆசிரமத்திற்கு அனுமதியளிக்கவேண்டும்.''

இதைக் கேட்ட தாயோ திக்பிரமை கொண்டு வேறென்றுஞ் சொல்லத் தோன்றுதவளாய், ஒருக்கால் தனது புத்திரன் பிழைக்கலாமென்ற எண்ணத்துடன் ''அப்பா! அப்படியே யாகுக'' என்று பதிலுரைத்தாள். தக்ஷணமே ஸ்ரீ சங்கரரும்

ப்ரேஷோச்சாரணம் செய்தார். உடனே அம் முதலையையுங்காணோம்.

## ஹா ஹா என்னும் கந்தர்வனது சாப நிவர்த்தி

தக்கணமே ஆகாயத்தில் ஒரு கந்தர்வன் தென்பட்டு, நமதாச்சாரியரின் பாதங்களைத் தொட்டு நமஸ்கரித்தான். குருமூர்த்தி அவனை யாரென வினவ, அக்கந்தர்வன் "ஹே மஹா ஸ்வாமி! நான் ஹா ஹா என்கிற பெயருள்ள ஒரு கந்தர்வன். ஒரு சமயம் நான் தூர்வாஸ மஹரிஷியை மரியாதை செய்யாததற்காக அவரது சாபத்தினால் முதலையானேன். அச்சமயம் அம்மஹரிஷியை 'எனக்கு மோக்ஷகாலம் குறித்தருள வேண்டு' மென யாசிக்க, அம்மஹானும் கருணை கூர்ந்து 'உலகத்திற்கெல்லாம் மோக்ஷகாலம் வருந்தருவாயில், காலடியில் அவதரிக்கப் போகின்ற ஸ்ரீ சங்கர குருமூர்த்தியின் காலடியை நீ பிடிக்க, உன் கர்வம் நீங்கி, உனக்கு மோக்ஷ முண்டாகும்' என்று அநுக்ரஹித்தார். அது முதற்கொண்டே நான் இக்காலடியில் இச்சூர்ணியிலேயே முதலையாய் வசித்து வந்தேன். இப்பொழுது ஸாக்ஷாத் பரமசிவனுடையதான தங்களுடைய காலடியையே பிடித்து மோக்ஷ மடைந்தேன்" என்று சொல்லித் தனதுலக மேகினான். இவ்வானந்தக் காக்ஷியைக் கண்ணுற்ற ஜனங்கள் யாவரும் ஆனந்த பரவசமும், ஆச்சர்ய பரவசமும் ஏககாலத்தில் கொண்டனர். அன்னையும் தனது திருமகன் பிழைத்தது பற்றிப் பேரானந்தமடைந்து ஹே குழந்தாய்! மனைக்குள்வா என்று அன்புடனழைக்க, புதல்வன் "அன்னையே! 'शिक्षाप्रदाजनन्य: पितरोगुरव:' நான்

இப்பொழுது உலகத்திற்கெல்லாம் குழந்தை யானேன். உலகெல்லாம் என் மனைகள். எனக்குப் பிக்ஷையருள்கிறவர்களெல்லாரும் என் தாய்மார் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. மேலும் உனது ஆணையை மேற்கொண்டே நான் ஆசிர மத்தையடைந்தேன். இனி நான் கிரமமான குருவை நாடிச் செல்லவேண்டும்'' என்று சொல்ல, தாய் மிகவும் மனம் நொந்தவளாய் ஒன்றுஞ் சொல்லத் தோன்ருது ''அப்பா! இதற்காகவா உன்னைப் பெற்றேன்?'' என வருந்தினள். ஆச்சாரியரும் ''என்னைத் தவிர வேறு புத்திரர் களில்லாதலால் உனது அந்திய காலத்தில் என்னை நீ ஸ்மரிப்பாயாகில், நான் உடனே வந்து உனக்காக வேண்டிய க்ருத்தியங்களைச் செய் கிறேன்'' என்று வாக்குக் கொடுத்து '𑌸𑌰𑍍𑌵𑌵𑌨𑍍𑌦𑍍𑌯𑍇𑌨 𑌯𑌤𑌿𑌨𑌾 𑌪𑍍𑌰𑌸𑍂𑌰𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌯𑌾 𑌪𑍍𑌰𑌯𑌤𑍍𑌨𑌤𑌃' என்கிற வாக்கியத்தின்படி, தாயை வணங்கி குருவைத் தேடி வடதிசையை நோக்கிப் புறப்பட்டு அனேக க்ஷேத்திரங்களையும் தீர்த்தங்களையும் அடனம் செய்துகொண்டே நர்மதாதீரத்தை யடைந்தார்.

## அத்தியாயம் 3

## ஆதிசேஷ அவதாரம், பதஞ்சலி முனிவர் சரித்திரம்

ஸ்ரீ நர்மதா தீரத்திலுள்ள ஓர் பெரிய ஆலவிரு க்ஷத்தினடியிலிருந்த குகையில் ஓர் மஹான் நிர் விகல்ப நிஷ்டையிலிருந்தார். இம்மஹானே நமது குருவுக்குக் குருவாகும் பாக்கியம் பெற்றவர். ஆதிசேஷனுடைய அவதாரமாகிய **ஸ்ரீ கோவிந்த**

**பகவத் பாத** ரென்கிற ஸித்த புருஷன் இவரே. ஆதியில் ஸ்ரீ சிதம்பர க்ஷேத்திரத்தில் நடராஜ மூர்த்தியானவர் ஆனந்தத் தாண்டவ மாடுங்கால், தனது 'டக்கை' (உடுக்கை) பதினுன்கு தடவை சப்திக்கச் செய்ய, அச்சப்தங்கள் பதினுன்கு ஸூத்ரங்களாயின. அச்சூத்திரங்கள் பதினுன்கை யும் ஆதாரமாகக் கொண்டே **பாணிநி** மஹரிஷி வியாகர்ண சாஸ்திர மியற்றினுர். அந்த வியா கரணத்திற்கு விற்பன்னர் யாவராலும் பொருளை ஆராய்ந்தறிய சாத்தியமில்லாமற் போயிற்று. இதைக்கண்ட அவ்வானந்தத் தாண்டவமூர்த்தி ஆதிசேஷனை தமது பாதச்சலங்கையை சல் சல் லென்று ஆட்டுவித்தார். பிறகு தமது பாத சப்தத் திற்குத் தாமே பொருள் கூறவேண்டி, அந்த ஆதி சேஷனையே பதஞ்சலி மஹரிஷியாய் அவதரிக்கச் செய்தார். பதஞ்சலியும் வியாகர்ண ஸூத்ரங் களுக்கு பாஷ்யமியற்றி, அதைச் சிதம்பரத்தில் தனதாயிரம் முகங்களின் வழியே ஆயிரம் சிஷ்யர் களுக்கு உபதேசித்து வந்தார். அப்படிப் பாடம் பயிற்றுவிக்குங் காலத்தில் தனது மூச்சினின்று உண்டாகும் விஷக்காற்று சீடர்களின்மேல் தாக்கா மலிருக்குமாறு அவர் ஒரு திரையினுள் மறைந்து, அத்திரையை ஒருவரும் திறக்காமலிருக்கும் வண்ணம் ஆக்ஞையிட்டிருந்தார். தான் உள் ளிருந்து பிரவசனம் செய்யுங்கால் யாரேனும் ஆக்ஞையை மீறி நடப்பின் அவர்கள் பிரம்ம ரக்ஷஸ் ஆவார்களென்ற கட்டளையு மிட்டிருந்தார். இங்ஙனம் பாஷ்ய உபதேசம் நடக்குங்கால், ஒரு நாள் ஒரு சிஷ்யன் சபல புத்தியினுல் ஆதிசேஷ அவதாரத்துடன் குரு வஸிக்கின்ருர் என்பதை

யறியாமல், ஒரே ஸமயத்தில் ஆயிரம் சிஷ்யர்களுக்கும் தனித்தனியே எவ்விதம் பாடம் சொல்லுகிருர்! என்பதைப் பார்க்க சற்று திரையைத் திறந்தான். உடனே ஆதிசேஷனுடைய விஷக்காற்றின் ஸ்பரிசத்தினுல் சிஷ்யர்களனைவரும் பஸ்பமாயினர்! இதைக் கண்ட பதஞ்சலி முனிவர் அதிக துக்கமடைந்து நின்ருர்.

## கௌடபாதர்

இச்சமயத்தில் குருவின் அனுமதியின்றி வெளிச்சென்றிருந்த ஒரு சிஷ்யன், ஆசாரியர் என்ன சொல்வாரோ என்ற பயத்தினுல் நடுங்கிக்கொண்டு திரும்பி வந்து, தன் ஸகபாடிகளனைவரும் சாம்பலாய்ப் போயிருந்ததைக் கண்ணுற்ருன். குருவோ ஒரு சிஷ்யனுகிலும் பிழைத்தானேயென்று ஆனந்தித்தார். ஆயினும் சிஷ்யனுக்குத் தான் முன்னர் இட்டிருந்த பிரம்மரக்ஷஸ் சாபத்தையும் கொடுத்தார். தன்னிடம் கிரஹித்த வித்தையை நல்ல அர்கமான ஒரு சீடனுக்கு உபதேசித்தவுடன் இச்சாபம் நீங்குமெனவும் ஆக்ஞாபித்தார். அச்சாபம் பெற்ற சீடருக்கு கௌடதேசமாகையால் அன்னவருக்கே "**கௌடபாதர்**" என்று பெயர். உடனே இவர் பிரம்மரக்ஷஸாக நர்மதா நதிக்கரையிலுள்ளவோர் அரச மரத்திலமர்ந்திருந்தார். யாரேனும் வந்தால் அவர்களைத் தனது வித்யோபதேசத்திற்கு அருகராவென்று பரீக்ஷித்துக் கொண்டிருப்பது வழக்கம். அருகரில்லாவிடில் அந்த ஜன்மத்திற் கேற்றவாறு அவர்களை ஆகாரம் செய்துவந்தார். இவ்விதம் வெகு காலம்வரையில் நடக்க, இவருக்குச் சரியான சிஷ்யர்கள் எவரும் அகப்படவில்லை. இப்படி

யிருக்க ஆதிசேஷன் தன்னுடைய அம்சத்தினுல் ஒரு பிராம்மணுேத்தமரை அவதாரம் செய்வித்தார். அவர் பெயர் சந்திர சர்மா. அவர் பிரமச்சரிய ஆசிரமத்தில் காஷ்மீரம் சென்று, வியாகர்ண ஸூத்திரங்களைக் கற்று, தென்தேயத்தில் இதற்கு பாஷ்யமிருக்கிற தென்று கேள்வியுற்று அத் திசையை நோக்கி வந்து கொண்டிருந்தார். வருங் காலையில் ஒருநாள் சாயங்காலம் சந்தியாவந் தனம் செய்யவேண்டி நர்மதா நதியிலிறங்கினுர். அவ்விடமோ நமது பிரம்மரக்ஷஸின் இருப்பிடமான அரசமரத்தடி. உடனே பிரம்மரக்ஷஸானது எவரை யும் பரீக்ஷிப்பது போல பசி என்னும் தாதுவிற்கு நிஷ்டா என்னும் பிரத்யயம் சேர்த்தால் என்ன உருவ மாகுமென்று கேட்டது. இதற்கு இதுகாறும் மற் றெல்லோரும் 'பசிதம்' என்றே சொல்லி வந்தார் கள். இவர் மாத்திரம் 'பக்வம்' என்று பகர்ந்தார். இதைக் கேட்டவுடன் பிரம்மரக்ஷஸ் இப்பிரா மணனை நோக்கி 'நீ யார்?' எனக் கேட்டது. அதற்கு சந்திர சர்மா "நான் பாஷ்யம் கற்கத் தென்தேய மேகுகின்றேன்" என்று பதிலுரைத் தார். பிரம்மரக்ஷஸும் அப்பாஷ்யம் என்னிடமே யிருக்கிற தென்றும், அப்பாஷ்யத்தைச் சொல்லுங் கால் தான் ஒரே மூச்சாகத்தான் சொல்லக்கூடு மென்றும், அச்சமயத்தில் ஒரு கணமேனும் அப் புறம் போகக் கூடாதென்றும், ஆக்ஞாபித்தது. சந்திர சர்மா அவ்விதமே சம்மதித்து நித்திரை, ஆகாரம் ஒன்றுமில்லாமல் பாஷ்ய காலக்ஷேபம் செய்தார். இடையில் ஞாபகத்திற்காக எழுதிக் கொள்ளவேண்டிய விஷயங்களை அம்மரத்தினின்றே அரசிலைகளைக் கிள்ளி, தன் துடையைக் கீறி

யெடுத்த உதிரத்தினுல் அவைகளில் அவ்வரசிலைக் காம்புகளைக் கொண்டே எழுதிக்கொண்டு வந்தார். இவ்விதம் சில காலமாகி பாஷ்யம் முடிந்த வுடன், கௌடபாதருக்குப் பிரம்மரக்ஷஸ ஜன்மம் நீங்கி, சுயரூபம் வந்துவிட்டது. உடனே அவர் பரமானந்த மடைந்தவராய் சந்திர சர்மா விற்கு அனுக்ரஹம் செய்து, பதரீகாசிரமத்திற்குப் போய்விட்டார். அவ்விடம் வியாஸமஹரிஷியின் புத்திரரும் வேதத்திலேயே 'शुकोमुक्तः' என்று சொல்லப்பட்டவருமான **சுகப் பிரம்மத்தின்** அனுக்கிரஹம் பெற்று, பிரம்ம வித்தியோபதேசம் பெற்று, துரீயாசிரமத்தையு மடைந்தார். சந்திர சர்மாவோ நர்மதா தீரத்தினின்று தெற்கேபோகும் சமயத்தில் தான் எழுதியிருந்த அரசிலை மூட்டையை ஓர் ஆற்றங்கரையில் வைத்துவிட்டு ஸ்நானம் செய்ய ஆற்றிலிறங்கினுர். அச்சமயம் ஓர் ஆடு அம்மூட்டையிலிருந்த சில அரசிலைகளைத் தின்றுவிட்டது. அவ்விதம் ஆடு தின்ற இலைகளி லிருந்த பாஷ்யபாகம் இப்பொழுது காணுமல் அஜபக்ஷித பாஷ்யமென்று கூறப்பட்டு வருகிறது. பிறகு அவர் உஜ்ஜயனீ நகரத்தின் வழியாய் வந்து கொண்டிருந்தார். அச்சமயத்தில் வெகு காலமாக நித்திரை ஆகாரமின்றி யிருந்ததால் ஒரு வீட்டுத் திண்ணையில் படுத்து பல நாள் தன்னை மறந்தவராகவே யிருந்தார். இப்படியிருக்க ஒரு நாள் அவ்வீட்டுக் கன்னிகை இவரைப் பார்த்து இவரது முகமலர்ச்சியிலிருந்து ஒரு மஹாபுருஷ ரெனவறிந்து, இவரையே விவாகம் செய்து கொள்வதாய் நிச்சயித்து, இவ்வபிப்ராயத்தைத் தனது தகப்பனிடத்தில் தெரிவித்தாள். தந்தையும்

இவ்விஷயத்தில் அதிக ஊக்கம் எடுத்துக்கொண்டு, அவருக்கு வைத்தியம் முதலியன செய்வித்து, அவர் முன் ஸ்திதியை அடையும்படி செய்தார். உடனே சந்திரசர்மா தனது மூட்டையை எடுத்துக் கொண்டு புறப்பட்டு விட்டார். இதைக்கண்ட கன்னிகையின் பிதாவும் இவரை மறிக்கையில் இருவருக்கும் விவாதம் ஏற்பட, அது அந்த நகரத் தரசன் முன்னிலையில் வந்தது. அவ்வரசனும் சந்திர சர்மாவின் ஞானத்தையும், தேஜஸையும் நோக்கித் தனது கன்னிகையையும் இவருக்குப் பாணிக்ரஹணஞ் செய்து கொடுத்தான். இந்த ரீதியாகவே அவ்வுஜ்ஜயனீ நகரில் அவருக்கு நான்கு விவாகங்கள் நடந்தன. பிறகு சந்திர சர்மா, பட்டி, விக்கிரமாதித்தியன் முதலிய உத்தம குமாரர்களையடைந்து, ஸம்ஸாரத்தில் வைராக்கிய மடைந்தவராய்த் தனது குருவான கௌடபாதரை நாடி, பதரீகாசிரமத்தை நோக்கிச் சென்றார். அவ்விடம் குருவினிடத்தில் துரீயாசிரமத்தை யடைந்து, தான் முன்னர் பாஷ்யங் கற்றவிட மாகிய நர்மதா தீரத்தையடைந்து அவ்விடமே நிஷ்டையிலமர்ந்திருந்தார். இச்சந்திர சர்மா வுக்கே கோவிந்த பகவத் பாதரென்று உத்தர ஆசிரமத்தின் நாமதேயம். இவ்வத்தியாயத்தின் ஆரம்பத்தில் கூறியபடி நமதாச்சாரிய மூர்த்தி யானவர் இம்மஹா புருஷனையே குருவாக வடைந்தார்.

## அத்தியாயம் 4

### கோவிந்த பகவத் பாதர்

ஸ்ரீ சங்கரர் தம் அன்னையிடம் விடைபெற்றுக் கொண்டு கோவிந்த பகவத் பாதரை நாடிவந்த ஸமயம் அம்மஹான் நிஷ்டையிலிருந்தார். அச் சமயம் நர்மதா நதியில் ஒரு பெரிய பிரவாஹம் ஊர்களையெல்லாம் முழுகடித்துக்கொண்டு வந்தது. ஜனங்களெல்லோரும் தங்கள் மனைவி மக்களுடன் தவித்துக்கொண்டு மஹா புருஷனான ஸ்ரீ கோவிந்த பகவத் பாதரிடத்தில் முறையிடலாமென்ற எண் ணத்துடன் ஆயிரக்கணக்காய் கூடியிருக்கிறார்கள். கோவிந்தரோ நிஷ்டையிலிருக்கின்றார். ஜனங் களும் தத்தளிக்கிறார்கள். நமது சங்கர மூர்த்தியும் இச்சந்தர்ப்பத்திலேயே நர்மதா தீரத்தையடைந் தார். நிஷ்டையிலிருந்து கோவிந்த பகவத் பாதரைக் கலைக்க இஷ்டமில்லாது திகைத்து நின் றார்கள். ஆனால் ஜனங்கள் தாங்கள் கூடி நின்ற காரணத்தை விக்ஞாபித்தவுடன், எட்டு வயதுள்ள நமது ஆச்சாரியமூர்த்தி தமது கடத்தை* அப் பூர்ணப் பிரவாஹத்தின் எதிரே பிடித்தார். அக் கணமே வெள்ளம் அக்கடத்திற்குள் புகுந்து விட்டது. இதைக்கண்ட ஜனங்கள் யாவரும் ஆனந்த பரவசராய் ஆரவாரித்தனர். இக்கூச்ச லால் கோவிந்த பகவத் பாதருக்கு நிஷ்டை கலைந்தது. விஷயங்களெல்லாவற்றையும் ஜனங் களால் அறிந்த கோவிந்தரும் நமது குருமூர்த்தி

---

* கடம் என்பது ஸன்யாஸிகள் உபயோகப் படுத்திக் கொள்ளும் ஓர் பாத்திரம்.

யின் அபாரமான மகிமையை மதித்து அதிக ஆனந்தமுற்ருர். உடனே ஸ்ரீ சங்கரரும் கை கூப்பி நமஸ்கரித்துநின்ருர். கோவிந்தர் "ஈசனது தரிசனத்திற்கு எவ்வளவோ மஹரிஷிகள் கடுந் தவஞ் செய்கிருர்கள். அங்ஙனமிருக்க, என் பாக்கி யத்தை என்னென்று சொல்வது! ஆயினும் உலக மரியாதையை யனுசரித்து, நீயும் உபதேசங் கொள்ள என்னிடம் வந்திருப்பதால், அவ்விதமே செய்து நானும் என்னை க்ருதார்த்தனுக்கிக் கொள்ளுகிறேன்" என்று சொல்லி, நமதாச் சாரிய மூர்த்தியை யணைத்து, உச்சி முகந்து, அநுக்ரஹஞ் செய்தார். பிறகு, நாராயணர், பிரம்மா, வஸிஷ்டர், சக்தி, பராசரர், வியாஸர், சுகர், கௌடபாதர் இந்தத் கிரமமாய் ஆதி புருஷ னிடமிருந்து தானுபதேசம் பெற்ற பிரம்ம வித்தையை சங்கரருக்கு கிரமரீதியாக வுபதே சித்துத் துரியாசிரமத்தையு மருளினுர். இந்த குரு பரம்பராகிரமம் அடங்கிய

नारायणं पद्मभुवं वसिष्ठं शक्तिंच तत्पुत्रपराशरं च ।
व्यासं शुकं गौडपदं महान्तं गोविन्दयोगीन्द्रमथास्य शिष्यम् ॥
श्रीशंकराचार्यमथास्यपद्मपादंच हस्तामलकंच शिष्यम् ।
तंत्रोटकं वार्तिककारमन्यानस्मद्गुरून् सन्ततमानतोस्मि ॥

இந்த சுலோகத்தையே நம்மவர் அநுசந்தானம் செய்வார்கள்.

இவ்விதம் பிரம்ம வித்யா குருபரம்பரைக் கிர மத்தை யுபதேசித்து, இந்த குரு பரம்பரையை மோக்ஷ புரியான ஸ்ரீ காஞ்சி க்ஷேத்ரத்தில் ஸ்தாபிக்கும்படி அநுக்ரஹித்தார். அந்த பரம்

பரையில் அது முதல் ஸ்ரீ சங்கரரைப்போலவே பிரம்மசரியத்திலிருந்தே ஸன்யாஸம் ஏற்பட வேண்டுமென்றும் கட்டளேயிட்டார். இந்த பரம்பரைகளுக்கு நான்கு வேதங்களின் மஹா வாக்கியங்களேயும் ப்ரணவத்தையும் உபதேசித்தார். நமது ஸ்ரீ லோக குருவும் தமது குருவிற்குச் செய்யவேண்டிய காரியங்களே விதிப்படி நடத்திக்கொண்டு, சிலகாலம் நர்மதா தீரத்திலேயே வஸித்து வந்தார். இவ்விதமாக விருக்குங் காலத்தில் ஒருநாள் ஸ்ரீ கோவிந்த பகவத் பாதர் ஸ்ரீ சங்கரரை அன்புடனழைத்துப் பின் வருமாறு கூறலாயினர். "முன்னொருகால் ஹிமாலய சிகரத்தில் அத்திரி மஹரிஷி ஒரு ஸத்திரயாகம் செய்தார். அந்த யாகத்திற்கு இந்திரன் முதலிய தேவர்களும் அனேக மஹரிஷிகளும் வந்திருந்தார்கள். அப்பெரியோர்களுடைய கூட்டத்தில் எனது பரமேஷ்டி குருவான வியாஸபகவான் வேதசிரசான உபநிஷத்துக்களுடைய தத்வார்த்தத்தை உபன்யஸித்துக் கொண்டிருந்தார். அப்போது நான் அவரைப் பார்த்து 'ஹே பகவன்! தாங்கள் வேதங்களேயெல்லாம் வியாபகம் செய்தீர்கள். பாரத மியற்றினீர்கள். பதினெண் புராணங்களேயும், யோகசாஸ்திரத்திற்குப் பாஷ்யத்தையும் செய்தீர்கள். மேற்சொன்னவைகளில் எவ்வித சந்தேகங்களும் வாராது, நிர்ணயமான அர்த்தத்தைக் கொடுத்து உலகத்தை யநுக்ரஹித்தீர்கள். ஆனுல் தாங்கள் எல்லாவற்றிற்கும் சிரஸாகவருளின வேதாந்த சாஸ்திரத்திற்குப் பலர் பலவாருக வித்தியாஸமான பொருள்களேக் கூறி விவாதித்துக் கொண்டிருக்கிருர்கள். இப்படி

யிருக்கத் தங்களுடைய அபிப்பிராயத்தை பாஷ்ய ரூபமாய் வெளியிடாத காரணமென்னவோ தெரிய வில்லையே' என ஸவிநயமாக வினவினேன். அதற்கு ஸ்ரீ வியாஸ பகவானும் 'சாக்ஷாத் ஈசுவர ஸ்வருபமான வேதாந்த சாஸ்திரத்திற்கு அவ் வீசனே பொருள் கூறவேண்டி அவரே இப்புவியி லவதரித்து உனக்கும் சிஷ்ய ரூபமாகவிருந்து நான் இயற்றிய வேதாந்த சூத்திரங்களுக்குப் பாஷ்ய மியற்றுவார்' என்று திருவாய் மலர்ந் தருளினர். மேலும் தாம் ஏதோ உலகத்திற்கு மாத்திரம் சூத்திரங்களை யியற்றினரே தவிர ஈசுவரனல் உண்டாக்கப்படும் பாஷ்யமே வேதாந்த தத்வமென் றுரைத்தார். ஆகையால் என்னைக் குருவாக வடைந்தவரும் ஸாக்ஷாத் ஈசுவர ஸ்வரூபியாகவுமிருக்கும் நீயே அவை களுக்குப் பாஷ்ய மியற்றவேண்டும்'' என்று முன் வியாஸ பகவானுக்கும் தமக்கும் நடந்த விருத்தாந் தங்களை கோவிந்த பாதர் நமது சங்கர மூர்த்தி யிடம் சொல்லி அவரை ஸ்ரீ வாராணஸி (காசி) க்ஷேத்திரத்தில் வஸிக்கும்படி ஆக்ஞாபித்தார்.

## அத்தியாயம் 5

### பரமசிவன் சண்டாள ரூபியாய் சங்கரரை எதிரிடல்

ஸ்ரீ சங்கரர் ஸ்ரீ காசி க்ஷேத்திரத்தில் மணி கர்ணிகா கட்டத்தில் வஸித்துக்கொண்டு சிஷ்ய கோடிகளுக்கு உபநிஷத்துக்களிலுள்ள ஆத்ம ஸ்வரூப தத்வ ஞானத்தை உபதேசித்து வந்தார். இச்சமயத்தில் ஸ்ரீ சங்கர குருமூர்த்தியின் மஹி

மையை எல்லோருக்கும் அறிவிக்க வேண்டுமென்று ஸ்ரீ விசுவநாதஸ்வாமிக்கு எண்ணம் பிறந்தது. ஒரு நாள் காலையில் நமதாச்சாரியபாதர் கங்கையில் ஸ்னானம் செய்து திரும்புங்கால், ஸ்ரீ விசுவேசுவரரும் சண்டாள வேஷம் பூண்டு நான்கு வேதங்களும் நான்கு நாய்களாய்ப் பின் தொடர வழியில் ஒதுங்காமல் குறுக்கிட்டார். உடனே சண்டாள வேஷத்தைக் கண்ட நமது குருநாதரும் गच्छ गच्छ (போ, போ) என்று உரக்கப் பகர்ந்தார்.

இதைக் கேட்ட சண்டாளன் கோபங் கொண்டு "ஓ யதிசிரேஷ்டரே; நீர் பிரதிதினமும் சிஷ்யர்களுக்கு உபதேசிப்பதோ எங்கும் நிறைந்த ஒரே சுத்தமான ஆத்மஸ்வரூபம். அவ்வாத்ம ஸ்வரூபமே புழு, சண்டாளன் இவைகள் முதலாக பிரம்மம் வரைக்கும் வியாபித்திருக்கிறது. மோக்ஷத்திற்கு அபேதபுத்தியே காரணமாகிறது. எதனிடத்திலும் பேதத்தையே காட்டலாகாதென்று சாஸ்திரங்கள் கூறவில்லையா? கங்கையில் பிரதிபிம்பிக்கின்ற சந்திரனுக்கும் சண்டாளன் வீட்டுக் கிணற்றில் பிரதிபிம்பிக்கிற சந்திரனுக்கும் ஸ்வரூபத்தில் ஏதேனும் பேதமிருக்கின்றதா? ஆகையால் என்னை யேன் விலகச் சொல்லுகிறீர்" என்று ஓர் ஆத்ம ஞானி எவ்விதம் கூறுவனோ அவ்விதமே வெகு தைரியமாக மறுமொழி கூறினான். நமதாச்சாரிய மூர்த்தியும் அத் தத்துவத்தை யறிந்து,

"जाग्रत्स्वप्नसुषुप्तिषु स्फुटतरा या संविदुज्जृम्भते
या ब्रह्मादि पिपीलिकान्त तनुषु प्रोता जगत्साक्षिणी ।
सैवाहं नच दृश्यवस्त्विवतिदृढप्रज्ञापि यस्त्यास्ति चेत्
चण्डालोस्तु सतु द्विजोऽस्तु गुरुरित्येषा मनीषामम"॥

என்கிற சுலோகத்தினுல் கீழ்வரும் அர்த்தத்தை வெளியாக்கினுர்.

"ஜாக்ரம் முதலிய மூன்று அவஸ்தைகளிலும் ஒன்ருயிருக்கும் ஆத்ம ஸ்வரூபமே யான்; பிரம்மா முதல் எறும்பு வரையில் ஒன்ருயிருக்கும் ஆத்ம ஸ்வரூபமே யான்; வெளித்தோற்றத்திற்குப் பார்க்கப்படும் ஸ்தூலங்களெல்லாம், நானன்று என்ற உறுதியான ஆத்மானுபவம் எவனுக்கு உளதோ அவன் சண்டாளனுயினும் சரி, பிராம்மணனுயினும் சரி அவனே எனக்குக் குரு" என்று ஐந்து சுலோகங்களைச் சொன்னுர். இவ்வைந்து சுலோகங்களும் வேதாந்த சமுத்திரத்தைக் கடைந்தெடுத்து அதனுலுண்டான அமிர்தம் போல இக்காலத்திலும் **மநீஷா பஞ்சகம்** என்று பாராயணம் செய்யப்பட்டு வருகின்றன.

### பரமசிவன் பிரத்தியக்ஷமாதல்

நமது குருமூர்த்தி ஐந்தாவது சுலோகத்தைச் சொல்லி முடிக்குமுன், எதிரிலிருந்த சண்டாளனையும் நாய்களையும் காணேம். அச்சண்டாளனுக்குப் பதிலாக மௌலியில் (தலையில்) விளங்கும் சந்திரகலையுடன் ஸ்ரீ ஸாக்ஷாத் காசிநாதனுன விசுவேசுவரரே விளங்கினுர். இதைக் கண்ட ஜனங்கள் யாவரும் பக்தி ஆச்சரியம் இவ்விரு கடல்களிலும் மூழ்கி ஆனந்த மடைந்தார்கள். விசுவேசுவரரோ, எதிரில் நமஸ்கரித்து நிற்கும் ஆச்சாரிய மூர்த்தியை யநுக்கிரஹித்துப் பின்வருமாறு ஆக்ஞாபித்தார். "ஹே சங்கரமூர்த்தியே! நீ என் ஸ்வரூபமேயாதலால் வேதத்தின் ஹிருதயத்தை அகில ஆத்மாக்களு முய்யுமாறு உலகில்

பிரசாரம் செய்விக்க வியாஸ ஸூத்திரங்களுக்கு பாஷ்யத்தை யியற்றி ஸாதுக்களுக்கு போதித் தருளவேண்டும். மேலும் நீயே லோக குருவாகி ஞானதர்மத்தை நிலைநாட்டுவாயாக.'' இவ் விதம் கூறிவிட்டு ஈசனும் அந்தர்த்யானமானுர்.

## பிரம்மஸூத்திர பாஷ்ய மியற்றியது

ஸ்ரீ சங்கரமூர்த்தியும் ஸ்ரீ விசுவநாதருடைய ஆக்ஞையினுலும் கோவிந்த பகவத் பாதருடைய அனுக்கிரஹத்தினுலும் உபநிஷத்துக்களின் தாத் பரிய நிர்ணயத்தின் பொருட்டு, ஸ்ரீ வேதவியாச முனிவரால் இயற்றப்பட்ட வேதாந்த சாஸ்திர மென்னும் பிரம்மஸூத்திர பாஷ்யத்தைத் தமது பன்னிரண்டாவது வயதிலேயே திருவாய் மலர்ந் தருளினுர்.

இன்றைக்கும் இதைக் கண்ணுறும் பாக்கி யத்தைப் பெற்ற பிறமதத்தினர்கள் கூட இதை எவ்வளவோ மெச்சுவதை நாம் பார்த்தும் கேட்டும் வருகிறோமல்லவா ? சிலர் இதைக்கண்ட மாத்திரத் தில் மேலே ஒன்றும் சொல்லத் தோன்றுதவராய்த் திகைத்து நின்றுவிடுகிறுர்கள். பிராம்மண ஜன் மத்தை எடுத்தவர்களெவரும் அந்தப் பாஷ்யத்தை அந்தந்தக் காலங்களில் எழுந்தருளியிருக்கும் குரு ஸ்தானங்களின் மூலமாய் ஓர் அக்ஷரமாவது அநு ஸந்தானம் செய்ய வேண்டுவது அத்யாவசிய மாகும். அப்படிச் செய்வதே அந்தப் பிராமண ஜன்மத்தின் ஸாபல்யம். கங்காப்பிரவாஹம் போல் பாஷ்யப் பிரவாஹமானது ஈசனது திருவாக்கி னின்றும் பிரவஹிக்க அதில் யாவரும் ஸ்னுனம்

செய்து "काश्यांतु मरणान्मुक्तिः" என்ற வாக்கிய மிருப்பினும், காசியில் வஸித்துக் கொண்டு இக லோகத்திலேயே ஜீவன் முக்தியை யடைந்தார்கள்.

இவ்விதம் காசி க்ஷேத்திரத்தில் வஸித்து வரும் ஸமயத்தில் சோழ நாட்டினின்று ஸநந்தனர் என்ற ஒரு பிராம்மணோத்தமர் ஸ்ரீ பகவத்பாதாச் சாரியருடைய சரணங்களை யடைந்து தன்னை சிஷ்யனுக்கிக் கொள்ளவேண்டுமென வேண்டினுர். நமதாச்சாரியரும் அவருடைய தேஜஸ்ஸையும் ஞானத்தையும் நோக்கி அதிக திருப்தி யடைந்தவ ராய் அவருக்குப் பிரதான சிஷ்யஸ்தானத்தை யளித்தார். ஸ்ரீ பிரம்மஸூத்திர பாஷ்யத்தை ஸநந் தனருக்கு மூன்று தரம் அநுக்கிரஹித்தார். பாஷ்ய பாடம் நடக்குங் காலத்தில், அவர் எங்காவது வெளிச் சென்றிருந்தால் நமதாச்சாரியார் அவருக் காக சற்றுத் தாமதிப்பது வழக்கம். இதைக் கண் ணுற்ற மற்ற சிஷ்யர்கள் சற்று மனந்தாளாதவ ராய், ஒருவருக்காக எல்லாரும் தாமதிக்க வேண்டி யிருக்கிறதே என்று நினைத்துவிட்டார்கள். அதை யறிந்த நமதாச்சாரிய மூர்த்தி ஸநந்தனருடைய பக்தியின் மகிமையை மற்ற சிஷ்யர்களுக்கும் அறி விக்கும் பொருட்டு, ஒருநாள் கங்கையின் அக் கரையிலிருந்து ஸ்னானம் செய்து விட்டு இக்கரை யில் நிற்கும் ஸநந்தனரை மடி வஸ்திரம் எடுத்து வரும்படி ஆக்ஞையிட்டார். கங்கையோ பூர்ணப் பிரவாஹமாயிருக்கிறது. நதிக்கரையிலும் ஓடம் முதலிய ஸாதனமொன்றும் தென்படவில்லை. ஸநந் தனர் குருவின் ஆக்ஞையின்படி உடனே நடக்க வேண்டுமென்ற ஒரே நிச்சய புத்தியுடன் எதிரி

லிருப்பது கங்கையோ தரையோவென்று தோன்ரு தவராய் திடீரென ஜலத்தில் ஓடிவரலாயினர். இவரது பக்தியைக் கண்ட கங்காதேவியும் இவருடைய ஒவ்வொரு பாதத்திற்கும் ஒவ்வோர் தாமரைப் புஷ்பத்தை அடியில் வைத்து வைத்து அதிவேகமாய் அக்கரை கொணர்ந்து சேர்த்தாள். ஸம்ஸார மென்னும் பெரிய ஸமுத்திரத்தையே தாண்டும்படி செய்யும் குருவாக்கானது இச்சிறு கங்காநதியைத் தாண்டச் செய்தது ஒரு பெரிய காரியமல்ல. அந்நாள் முதற்கொண்டே ஸனந்தனருக்கு பத்மபாதர் என்று பெயர் வாய்ந்தது. இவ் வாச்சரியத்தைத் கண்ணுற்ற ஸர்வப்பிராணிகளும் குருபக்தியின் மகிமையைப் பிரத்தியக்ஷமாய்க் கண்டு கொண்டார்கள். இந்தப் பத்ம பாதரே ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் அவதாரம். இவருடைய சரணத்தினின்றே கங்காதேவியானவள் பிரவஹிக்கிருள். ஸ்ரீமந் நாராயணனுடைய பாதத்தை பத்மாலயையான பத்மையானவள் எக்காலத்திலும் தனது முடிமேற்ருங்கிக் கொண்டிருப்பதால், அந்நாராயண மூர்த்தியின் அவதாரமாகிய நமது பத்மபாதரின் பாதத்தை பத்மம் தாங்கியது ஓர் ஆச்சரியமோ ?

## வியாஸ பகவான் விருத்தரூபம் தரித்து வாதாடல்

ஸ்ரீசங்கரரது பாஷ்யப் பிரவசனம் வரவர அதிகரித்து அதனுல் கோடிக்கணக்கான ஸாதுக்கள் கிருதார்த்தர்களாகி வருங்காலையில், ஒருநாள் ஒரு விருத்தப் பிராமணர் ஸ்ரீபகவத் பாதரின் ஸமீபத்தையடைந்து, ஆங்கு நடக்கும் விஷயங்க

ளென்னவென்று வினவினர். அதற்குச் சிஷ்யர்களும் அவ்விடம் பாஷ்ய பாடம் நடக்கின்றதென மறுமொழி கூறினர். இதைக் கேட்ட விருத்தர் 'தனக்கு பாஷ்யத்தில் சில சந்தேகங்களிருப்பதாயும், அதற்காக ஆச்சாரியருடன் வாதாட வேண்டுமென்றும்' சொன்னர். நமதாச்சாரியரும் அதற்கு அனுமதியளிக்க, 'तदन्तरप्रतिपत्तौ' என்கிற அதிகரணத்தில் வாதம் ஆரம்பிக்கப்பட்டது. அது மிகவும் துரூஹமான வாதமாகையால் இடைவிடாமல் எட்டு நாட்கள் வாதங்கள் நடந்தன. இதைக்கண்ட பத்மபாதரும், ஸாக்ஷாத் ஈசனுன ஆச்சாரியருடைய ஸன்னிதானத்தில் எட்டு நாள் வரையில் தோற்காமல் நிர்வகிக்கும் அவ்விருத்தர் எவரென ஆலோசித்தார். உடனே தியானத்தில் அவர் ஸ்ரீவேதவியாஸ பகவானே யென்றறிந்து கீழ்வரும் சுலோகத்தைச் சொன்னர்.

"शंकरश्शंकरस्साक्षाद्व्यासो नारायणोहरिः।
तयोर्विवादेसंप्राप्ते किंकरः किंकरोम्यहम्॥"

சங்கரரோ ஸாக்ஷாத் சங்கரன். இவ்வியாஸரே
ஹரியாகும் நாராயணன். இவ்விருவருக்கும்
விவாதமுண்டாயின் கிங்கரனுன நான் என்னசெய்வேன்.

இதைக் கேட்டதும் நமதாச்சாரியர் சற்று ஸ்மரித்து ஸ்ரீ வியாஸ பகவானே வந்திருப்பதை யறிந்து "ஹே ஸ்வாமின்! தங்களது ஸூத்திரங்களுக்கு நான் ஸரியான பாஷ்யமியற்றி யிருப்பேனுகில், உடனே இந்த வேஷத்தை விட்டு ஸ்வஸ்வரூபக் காக்ஷியைத் தந்தருள வேண்டும்" என்று பிரார்த்தித்தார்.

உடனே ஜடாமகுட தாரியாயும், வியாக்ராஜின பரிவ்ருதராயும், பஸ்ம ருத்திராக்ஷ பூஷிதராயும் ஸ்ரீ வியாஸ பகவான் பிரத்தியக்ஷமாகி சங்கரரை நோக்கிக் கூறலாயினர். "உமது மகிமையை இப்பிராகிருத உலகம் அறியுமாறே நான் இவ்வுரு மாறி வந்தேன். நான் செய்த பிரம்மஸூத்திரங் களுக்கு நீர் பாஷ்யமியற்றினும் அப்பாஷ் யார்த்தத்தை விதண்டையாக வாவது என்னல் மறுக்க இயலுமோ? என்னுடைய ஸூத்திரங் களின் ஹிருதயத்தை வேறு எவர் அறிவர். "शिवस्यहृदयं विष्णु: विष्णोश्चहृदयंशिव:" சிவனுடைய ஹிருதயம் விஷ்ணு விஷ்ணுவின் ஹிருதயம் சிவன் என்றதால், என்னுடைய ஹிருதய அபிப்பிராயம் உமக்குத்தானே தெரியும். இவ்விஷயத்தை எல்லோரு மறிந்து உமது பாஷ்யத்தில் சிரத்தை யுறுமாறு நான் இவ்விடம் வந்தேன்" என்று சொல்ல, ஆச்சாரியரும் ஆனந்த பரவசராகி "மஹரிஷே! தங்களுடைய தரிசனத்திற்குப் பிறகு நான் செய்யவேண்டியது யாதுளது? தங்களது பிரம்ம ஸூத்திரங்களுக்கோ பாஷ்ய மியற்றியாய் விட்டது. அதையும் அனேக சிஷ்யர்களுக்குப் போதித்து விட்டேன். தங்களையும் தரிசித்தேன். இனி யான் செய்யவேண்டுவது யாதுமில்லை. இனி நான் என் சுயரூபத்துடன் கலந்து நிற்கவேண்டு வதுதான்" என்று சொல்ல, வியாஸர் "உமக்கு ஜன்மத்தினுல் ஏற்பட்ட வயது எட்டு. உமது ஸன்யாஸ யுக்தியினுல் நீர் இன்னும் எட்டு வயதை அதிகமாக ஸம்பாதித்துக்கொண்டீர், அதைக்கொண்டு உமக்குத் தற்காலம் பதினறு வயதாகின்றதன்றோ? ஆகிலும் நீர் இன்னும்

இவ்வுலகில் திக்குவிஜயம் செய்து கலியின் மகிமை யினுல் ஏற்பட்டிருக்கும் எழுபத்திரன்டு துர்மதங் களையுங் களைந்து, வைதிகமான ஆறுமதங்களை ஸ்தாபித்து உலகத்தைக் காக்கவேண்டும். மேலும் வேதாந்த உபநிஷத் தத்துவத்தைக் கண்டாகோஷ மாய்ச் செய்வித்து ஸகல தேசங்களுக்கும் ஸகல மதங்களுக்கும் லோக குருவாய் விளங்கி ஸர்வக்ஞ பீடமேறிய பிறகுதான், நீர் சுய ரூபத்தை யடைய வேண்டும். இக்காரியங்களை முடிக்க இன்னும் பதினுறு வயதை என்னுல் ஏற்றுக்கொள்ள வேண்டும்'' என்று அநுக்கிரஹ ரூபமாகவும் பிரார்த்தனுரூபமாகவும் பகர, நமதாச்சாரிய மூர்த்தி அதைச் சிரஸால் வகிக்க, வியாஸர் ஆசீர் வதித்து மறைந்தார்.

## அத்தியாயம் 6

## திக்குவிஜய யாத்திரை

ஸ்ரீவேதவியாஸ முனிவரின் அநுக்கிரஹத் தினுல் பின்னும் பதினுறு வயதடைந்து அவரது ஆக்ஞையின் பேரில் நமதாச்சாரிய மூர்த்திகள் திக்குவிஜயம் செய்யப் புறப்பட்டார். முதலில் கீழ்த்திசையை நோக்கிச் செல்ல, அத்தேசத்ததிப தியான ஹாலனென்னும் அரசன் நமதாச்சாரி யரைப் பலவாருக உபசரித்தான். பிறகு மகதம் வங்கம் இத்தேசங்களில் சஞ்சாரம் செய்து எல்லா ஜனங்களும் தங்களுடைய ஸ்வய ரூபத்தையறிந்து கடைத்தேறும்படி அநுக்கிரஹம் செய்துவந்தார்.

## பிரயாகையில் குமாரக்கடவுளைச் சந்தித்தல்

இச்சமயம் பிரயாகையில் கேவலம் கர்ம வாதமாகிற மீமாம்ஸா சாஸ்திர ப்ரவர்த்தகரான குமாரில பட்டரென்பவர் திரிவேணியில் சரீரத் தியாகம் செய்து கொள்ளப்போகின்ருர் என்ற செய்தி நமது குருமூர்த்திக்கு எட்டியது. மீமாம்ஸா சாஸ்திரமானது வேதாந்தத்தையும் ஒப்புக்கொண்டு, கர்மாவினுலேயே மோக்ஷம் ஏற்படுகிற தென்றும், ஈசுவர பக்தி ஆத்மஞானம் இவை யொன்றும் தேவையில்லை யென்றும், வாதிக்கின்றது. ஆகையால் இது முதலில் கண்டிக்கப்பட வேண்டியதாகும். இன்னும் இது வேத நியாயங்களையே யனுஸரித்துப் போவதால் கண்டிப்பதும் கடினமாக விருக்கும். இவ்வாதத்தின் மூலமாய் வேத நிந்தை செய்யும் கேவலம் சூன்யவாதமான பௌத்த மதத்தைத் தொலைக்கவே ஆதியில் குமாரக்கடவுளை குமரில பட்டராக அவதரிக்கச் செய்தது; ஆயினும் கர்மமீமாம்ஸா மார்க்கத்தைக் காட்டிலும், அதிக கடினமாகும் படியானவளவு அது வார்த்திக நியாய விஸ்தாரத்தை யடைந்து விட்டதால், அவசியம் நிராகரிக்கப்பட வேண்டியதாயிற்று. அக்குமாரிலர் பால்யத்தில் பௌத்த சமயத்தை நிராகரிக்க அம்மதத்தைக் கசடறக் கற்கவேண்டி, பௌத்த வேஷம் பூண்டு பௌத்த சமயாச்சாரியர்களிடம் மத போதனை பெற்று வந்தார்! அப்பௌத்தர்கள் மித மிஞ்சி வேதங்களைத் தூற்றும் பொழுது, நமது குமாரிலருக்குத் தன்னை யறியாமலேயே கண்ணீர் பெருக வாரம்பித்தது. இதைக்கண்ட பௌத்தர்களும் இவர் ஓர்

அந்தணரோ வென ஐயமுற்றனர். சில சமயங்களில் இவ்விஷயத்தைக் குறித்து அவர்கள் வினவவும் வினவினுர்கள். அதற்கு குமாரிலரும் புத்த வாதத்தின் சாதுர்யத்தைக் கேட்ட மாத்திரத்தில் பெருகும் ஆனந்தக் கண்ணீரென மறைத்துக் கூறினுர். ஆனுலும் பௌத்தர்கள் இவரது புத்தி விசாலத்தையும் அடிக்கடி இவரை யறியாது கண்ணீர் பெருகுவதையும் கண்ணுற்று, இவரை வேதியரெனவே நிர்ணயித்து, ஒரு பெரிய மாளிகையில் மூன்ருவது மாடியினின்று திடீரெனக் கீழே தள்ளிவிட்டார்கள். உடனே குமாரிலரும் "வேதங்கள் பிரமாணமாயிருப்பின் நான் சுகமே தரை சேருவேன்" என்று சொல்லிக்கொண்டே ஓர் அங்கஹீனமுமில்லாமல் கீழேவிழுந்தார். ஆனுல் ஒரு கண் மாத்திரம் ஊனமாய் விட்டது. உடனே ஓர் அசரீரி வாக்குண்டாகி "வேதங்கள் பிரமாணமாயிருப்பின் என்று சந்தேகமாய்ச் சொன்னதால், ஈசன் இவ்வூனத்தைச் செய்வித்தார்" என்று உதித்தது. பிறகு நமது குமாரிலரோ புத்த மதத்தின் உண்மைகளை அச்சமயத்தவரைக் காட்டிலும் அதிகமாய்க் கற்று, அம்மதத்தைக் கண்டித்து, வேத மார்க்கத்தை நிலை நாட்டினுர். ஒரு சமயம் தன்காரியங்களைத் தானே நினைத்துப் பார்க்குங்கால் அவருக்குக் கீழ் வருமாறு மனதில் உதித்தது. "எவரிடமாவது ஓர் அக்ஷரத்தைக் கற்ருல் அவர் குருவென்று சாஸ்திரம் கூறுகின்றது. அப்படியிருக்க, புத்த குருவிடம் மாறுவேடம் பூண்டு சாஸ்திரம் கற்ற குற்றம் போதாமல், அவரையும் நிந்திக்க நேர்ந்தது. அது பிறமதமாயிருந்ததால், அதை நாம் கற்றது குற்றமாகும்.

அம்மஹா பாவத்திற்கு நான் என் செய்வேன்''
இவ்விதமாக மனவருத்த மடைந்து குரு நிந்தைக்கு
வைதீக மார்க்கமான பிராயச் சித்தங்களைத்
தேடினர். குரு நிந்தை என்ற அபராதத்திற்கு
உமிக்காந்தல் நெருப்பில் நின்றுகொண்டு பிரா
ணனை மாய்த்துக்கொள்ள வேண்டியதென்று சாஸ்
திரங்கள் கூறின. அவ்விதமே மஹா தைரியத்
துடன் திரிவேணியில் பிராயச்சித்தத்தை நிறை
வேற்ற வாரம்பித்து விட்டார்.

என்ன ஆச்சிரியம்! வே தத்தில் எவருக்கு
இவ்வளவு திட நம்பிக்கை ஏற்படும்! லோகோப
காரமான காரியத்தில் கூட ஏற்பட்ட பாபத்திற்கு
மரணப் பிராயச்சித்தத்தைச் செய்துகொள்வ
தென்றால், அவரது தைரியத்தை என்னென்று
சொல்வது! முன் சொல்லியபடி ஸ்ரீ சங்கரகுரு
நாதருக்கு இச்செய்தி எட்டியது. உடனே சங்கர
ரும் அக்குமாரிலருடன் கர்மப்பிரம்ம மார்க்கங்
களைக் குறித்து, வாதம் செய்ய வேண்டி அதிவேக
மாகத் திரிவேணியை யடைந்தார். அவ்விடத்தில்
கழுத்து மட்டும் உமியைக் கொட்டிக் கொண்ட
வராய், இடுப்பு வரையில் எரிந்து போன அவஸ்
தையில் குமாரிலரைக் கண்ணுற்றார். இக்காக்ஷி
யைக் கண்டு கருணை மூர்த்தியான நமதாச்சாரியர்
சற்றே துக்கமடைந்தார். உண்மையில் குமா
ரிலருக்கு ஸாக்ஷாத்காரத்தை யுண்டாக்கி, ஸ்வஸ்
வரூபமென்னும் முக்தியைத் தந்து விட்டார்.
"உடனே இப்போது கிருதார்த்தனானேன்.
தங்களுடைய ஆக்ஞைக்காக உலகில் மீமாம்ஸக
வேஷங்கொண்டு நடித்தேன். இப்பொழுதோ என்

பாதி சரீரத்திற்குமேல் சாம்பலாகி விட்டது. இனி என்னிடம் வாதம் செய்வதேன்? ஆயினும் வாதம் செய்தே கேவல கர்ம மார்க்கத்தை ஜயித்து உலகத்திற்கு நிதர்சனமாக்க வேண்டுமானல், என்னிலும் அம்மார்க்கத்தில் பற்றுள்ளவனும் அதிக ஸமர்த்தனும், காச்மீர தேசத்தில் பத்ம வனம் என்ற பிரதேசத்தில் வசிக்கின்ற எனது சிஷ்யன் மண்டன மிச்ரனிடம் சென்று அவனே ஜயித்து கிருதார்த்தனுக்கக் கடவீர்கள்'' என்று சொல்லிவிட்டு சரீரத்தியாகம் செய்து விட்டார்.

## மண்டன மிச்ரர் அல்லது சுரேசுவராச்சாரியர்

ஆச்சாரிய ஸ்வாமிகள் அங்ஙனமே காச்மீரம் சென்று பத்மவனமென்கிற பிரதேசத்தில் மாஹிஷ்மதி யென்ற பட்டணத்தை யடைந்தார். மண்டனமிச்ரரோ ஒரு பெரிய சக்கிரவர்த்தியின் ஐசுவரியத்தைப் பெற்றவர்; வேதங்களில் கூறப்பட்ட கர்மமொன்றையும் தவறவிடாது நடத்தி வருபவர்; ஸாக்ஷாத் பிரம்மாவினுடைய அவதாரம். இவரது மனேவியே ஸரஸவாணியென்று பெயர் பூண்ட ஸாக்ஷத் ஸரஸ்வதீ தேவி. மண்டன மிச்ரர் கர்ம மார்க்கத்தைத் தவிர பக்தி, ஞான மார்க்கங்களொன்றுமில்லே யென்ற ஸித்தாந்தத்தைக் கொண்டவராகையால், ஞானசிரமமான ஸன்னியாஸ ஆசிரமம் பூண்டவர்களேப் பார்ப்பதேயில்லே.

ஆச்சாரியமூர்த்தி மாஹிஷ்மதிப் பட்டணத்தையடைந்து இவருடைய இல்லம் எங்கிருக்

கிறதென வினவினர். "எவருடைய மாளிகையில் வைக்கப்பட்டிருக்கிற கிளிகள் துரூஹமான சாஸ்திர வாதங்களைச் செய்கின்றனவோ அதுவே மண்டனமிச்ர பண்டிதருடைய கிருஹம்" என்று ஜனங்கள் பதிலுரைத்தார்கள். மண்டன மிச்ர ருடைய கிருஹத்தில் அன்று சிரார்த்தமாகையால் எவரும் உள்ளே வராது காவல்வைத்து ஜைமினி மஹரிஷியையும் வியாஸபகவானையும் பிராம்மண ராக வரித்து, கர்மாவை ஆரம்பிக்குந் தருணமா யிருந்தது. வீட்டின் கதவு அடைத்திருந்தது கண்டு நமதாச்சாரியபாதர் தமது யோகபலத் தினால் ஆகாய மார்க்கமாய் வீட்டின் முற்றத்தி லிறங்கினர். இவரைக் கண்ட மாத்திரத்தில் ஜைமினியும், வியாஸரும் அளவிலா ஆனந்தங் கொண்டார்கள். சிரார்த்தத்தில் ஸன்யாஸிகள் விஷ்ணுஸ்தானத்தில் உட்காருவது விசேஷமாகை யால் ஸாக்ஷாத் ஆச்சாரிய மூர்த்தியே வர, வியாஸருடைய ப்ரேரணையினால் மண்டனமிச்ரர் ஆச்சாரியரை விஷ்ணு ஸ்தானத்தில் உட்காரும் படி வரித்தார். ஆச்சாரிய ஸ்வாமிகளோ "நான் அன்ன பிக்ஷைக்காக வரவில்லை, வாதபிக்ஷைக் காகவே வந்தேன்" என, மண்டனரும் "அவசியம் வாதம் செய்வோம். இப்போது இந்தப் பிக்ஷை யாகட்டும்" என்று கேட்டுக்கொண்டார். அவ் விதமே சிரார்த்தம் முடிவடைந்தது. பின்னர் கேவல கர்மமார்க்கத்தின் ஸித்தாந்தத்திற்கும் வேதாந்த ஸித்தாந்தத்திற்கும் வாதம் தொடங் கிற்று. சாதாரணமாய் மண்டனர் சிகை, யக்ஞோப வீதம் இவைகளற்றவர்களைப் பார்ப்பது கூட இல்லை. ஆயினும் அன்றையதினம் ஜைமினி, வியா

ஸர் இவர்கள் இருந்தபடியாலும், ஈசனே திருவுருக் கொண்டு வந்ததாலும் மரியாதை செய்தார். இவ் வாதத்தில் மண்டனர் ஜயித்தால், ஸ்ரீ சங்கர மூர்த்திகள் கிருஹஸ்தாசிரமத்தை யடைவதென் றும், ஸ்ரீ சங்கரர் ஜயித்தால் மண்டனர் சிகை, யக்ஞோபவீதங்களை எறிந்து ஸன்யாஸங் கொள்வ தென்றும், தீர்மானிக்கப்பட்டது. பிரம்மாவதார மான மண்டனமிச்ரருடைய பத்தினியும் ஸரஸ்வதீ தேவியின் அவதாரமுமான சரஸவாணியே மத்தி யஸ்தத்திற்கு ஏற்பட்டாள். ஆனால் ஸரஸ வாணியோ ஈசனுக்கும், பர்த்தாவுக்கும் நடுவி லிருந்து மத்தியஸ்தம் செய்வது உசிதமல்லவென் றெண்ணி இருவர் கழுத்திலும் ஒவ்வொரு புஷ்ப மாலையைச் சாற்றி, இவைகளில் எவர் கழுத்து மாலை வாடுகின்றதோ அவரே தோற்றவர் என்ற மத்தியஸ்தத்தை முன்னதாகவே கூறிவிட்டாள். வாதமோ பல நாட்கள் வரையில் நடைபெற்றது. ஒவ்வொரு நாளும் மத்தியான காலத்தில் ஸரஸ வாணியானவள் குருமூர்த்தியை பிக்ஷைக்கும் மண்டனரை போஜனத்திற்கும் பிரார்த்திப்பது வழக்கம். இவ்விதம் நடந்துவரும் ஸமயத்தில் ஒருநாள் திடீரென மண்டனமிசிரருடைய கழுத்தி லிருந்த ஹாரம் சற்று வாடவாரம்பித்தது. அன்று ஸரஸவாணி இருவரையும் பிக்ஷக்கநுக் கிரஹிக்க வேண்டுமென் றழைத்தாள். அன்றே மண்டன ரும் வேதாந்த ஸித்தாந்த தத்துவத்தை யுட் கொண்டு நமதாச்சாரிய மூர்த்திக் கடிமையானார். உடனே ஸரஸவாணியும் ஆகாயமார்க்கமாய்த் தன்னுலகம் நோக்கிப் புறப்பட்டாள். ஆச்சாரிய மூர்த்தி சாரதாம்பிகையை உலகில் பிரதிஷ்டை

செய்யவேண்டுமென்கிற எண்ணத்துடன் வன துர்க்கா மந்திரத்தை யுச்சரித்து, அவ்விதமே உலகத்திலிறுத்தி, தாம் விடையளிக்கும் வரையில் இவ்வுலகிலேயே இருக்க வேண்டுமென்று பிரார்த்தித்தார். மண்டனமிச்ரரும் ஸன்யாஸங் கொண்டு, ஸுரேச்வரர் என்ற திருநாமம் பெற்ருர்; ஆச்சாரிய சிஷ்யர்களுக்குள்ளும் முதன்மையானுர். மீமாம்ஸா வார்த்திகக்காரரான குமாரிலரைக் கொண்டு பாஷ்யத்திற்கு வார்த்திகமியற்ற வேண்டு மென்று அவாக்கொண்டிருந்த நமதாச்சாரியர் ஸுரேச்வரரைக்கொண்டு ப்ருகதாரண்யக பாஷ்யம், தைத்ரீய பாஷ்யம் இவ்விரண்டிற்கும் வார்த்திக மியற்றுவித்தார். இவர் வேதாந்தத்தில் பூர்ணஞானமும் சிரத்தையுமுள்ளவரென்று எல்லோரும் கண்டு கொள்ளுமாறு "நைஷ்க் கர்ம்ய ஸித்தி" யென்ற உத்தமோத்தமமான ஓர் வேதாந்தக் கிரந்தத்தை யியற்றினுர்.

### குருவையும் பரமகுருவையும் தரிசித்தல்

மண்டனமிச்ர விஜயமானதும், ஸ்ரீ சங்கர மூர்த்திகள் தம் பரமாச்சாரியரான கௌடபாதரை தரிசிக்குமாறு பதரீ கேதாரத்தை யடைந்தார். அவ்விடத்தில் ஒரு குகையின்கண் கௌடபாதரும் வெளியில் கோவிந்தபாதருமாக நிஷ்டையிலிருக்கக் கண்டார். அவர்களைத் தன் முகமாக்கத் தக்ஷிணமூர்த்தியஷ்டகமென்னும் எட்டு சுலோகங்களை அமிருத தாரையாக வருஷித்தார்.

"विश्वंदर्पणदृश्यमान नगरी तुल्यं निजान्तर्गतं
पश्यन्नात्मनि माययावहिरिवोद्भूतं यथा निद्रया ।

यस्साक्षात् कुरुते प्रबोधसमये स्वात्मानमेवाद्वयं
तस्मै श्रीगुरुमूर्तये नमइदं श्रीदक्षिणामूर्तये ॥"

என்பதான எட்டு சுலோகங்களையும் இன்றைக்கும் வேதாந்த பாஷியம் கிரஹிக்குங்கால் மூதோர் அனுசந்தானஞ் செய்கிறார்கள். இந்தத் தக்ஷிணு மூர்த்தி ஸ்தோத்திரமானது ஸ்ரீ சங்கரரது பரம குருவினுடையவும் குருவினுடையவும் செவியில் பட, உள்ளிருக்கும் பிரம்ம நிஷ்டையும் வெளியில் சப்தமயமாய்ப் பிரகாசித்தது. உடனே அவர்கள் நிஷ்டையிலிருந்து விழித்துக்கொண்டு, தங்களது பிரியசிஷ்யரான நமது ஆச்சாரிய மூர்த்தியைக் கண்ணுற்றுத் தங்களது பாக்கியத்தைக் குறித்துத் தாங்களே துதித்துக்கொண்டார்கள். பிறகு ஸ்ரீ சங்கரருடைய பாஷ்யங்களை யெல்லாம் கண்ணுற்று, ஆனந்தித்து அநுக்கிரஹித்தார்கள்.

## அத்தியாயம் 7

### கைலாஸத்தினின்று பஞ்சலிங்கங்களைக் கொண்டு வருதல்

ஸ்ரீ சங்கரர் பரமகுருவான கௌடபாதரின் அனுக்கிரஹம் பெற்று கங்கோத்தரியில் ஸப்த கோடி மஹா மந்திரங்களையும் ஸப்தகோடி மஹா மந்திர ஸித்திகளையுமடைந்தார். இச்சமயம் நமதாச்சாரியருக்கு ஸ்ரீ கைலாஸவாஸியான பரம சிவனைத் தரிசிக்க எண்ணம் உதித்தது. உடனே அவர் ஸ்ரீ கைலாஸகிரியை யடைந்து அங்கு ஸ்ரீ பரமசிவன் வீற்றிருந்த லாவண்யத்தையும் அவரது மகிமையையும் நோக்கித் தம்மை மறந்த

வராய்க் கீழ்வரும் வாக்கியரூபமாய் ஈசனைத் துதிக்கலானார்.

"मुनिवरहृदयांबुज ........................................

..........................परमशिवाख्यं परंब्रह्म जयतिजयति

பரமசிவனும் சங்கரமூர்த்தியைப் பார்த்த மாத்திரத்தில் ஆனந்த மடைந்தவராய்ச் சொல்லலானார். "எனது அம்சமான உன்னுடைய ஞான மார்க்க லீலைகளால் உலகில் அநேகமாய் அஞ்ஞானமாகிய இருள் நீங்கிவிட்டது. ஆயினும் ஞானவாஸனையைப் பற்ற வியலாத பாமரர்களும் உஜ்ஜீவிக்கும்பொருட்டு இந்தப் பஞ்ச ஸ்படிக லிங்கங்களைத் தருகின்றேன்; இவற்றை உலகிலுள்ளோர் தரிசிப்பாராயின், வேதாந்த பாஷ்யம் முதலியவைகளை யறிந்து, அடையவேண்டிய ஞானத்தையும் எளிதில் அடைவார்கள்."

இவ்விதம் கூறிவிட்டுப் பரமசிவன் ஸ்ரீ சங்கரருடைய கரத்தில் ஐந்து சங்கரமூர்த்திகளான ஸ்படிகலிங்கங்களைத் தந்தருளினார். நமதாச்சாரியருடைய பிரார்த்தனைக் கிணங்கிப் பரமசிவன் ஸ்ரீ அம்பிகையின் பரம ரஹஸ்யமான ஸௌந்தர்ய லஹரீ மந்திர ஸ்தோத்திரத்தையு மனுக்கிரகித்தார். நமது குருமூர்த்தியும் அப்பஞ்ச லிங்கங்களிலொன்றான யோகலிங்கத்தை தமது ஆத்ம பூஜைக்காக வைத்துக்கொண்டார்.

## பத்ரீகாச்ரமத்தில் ஜ்யோதிர்பீட ஸ்தானபம்

இப்பஞ்ச லிங்கங்களையும் பெற்றுக்கொண்டு, ஆச்சாரிய மூர்த்திகள் திரும்பவும் பதரியை யடைந்தார். அவ்விடத்தில் முக்தி லிங்கத்தை

ஸ்தாபித்து ஜ்யோதிர்மதி யென்னும் பீடத்தையும் ஏற்படுத்தினர். பிறகு நேபாளத்தையடைந்து அவ்விடம் பௌத்தம் முதலிய மதவாதிகளைக் கண்டித்து அவர்களை நல்ல மார்க்கங்களில் பிரவேசிக்கும்படி செய்து, அத்தேசத்து மன்ன னுக்கு ஸதுபதேசத்தையும் செய்வித்தார். அவ் விடம் நீலகண்ட க்ஷேத்திரத்தில் **வரலிங்கத்தை** ஸ்தாபித்தார். பிறகு தக்ஷிண தேசம் நோக்கித் திக்கு விஜயத்திற்காகப் புறப்பட்டார். அக்காலத் தில் நமது தேசத்தில் எழுபத்திரண்டு துர்மதங்கள் வியாபித்திருந்தனவென்று சொல்லப்படுகிறது. ஆச்சாரியரும் அனேகவிடங்களுக்குச் சென்று ஆங்காங்குள்ள இதர மதவாதிகளையும் தமது தரிசன மாத்திரத்தினுலேயே ஞான மார்க்கத்தை யடைந்து புத்தியைப் பெறும்படி அநுக்கிரஹித் தார்.

## துவாரகையில் காளிகாபீட ஸ்தாபனம்

இவ்விதம் ஸ்ரீ சங்கரர் அனேக தீர்த்தாடனங் களையும் க்ஷேத்திராடனங்களையும் செய்து, துர் வாதங்களைக் கண்டித்துக்கொண்டு திக்விஜயம் செய்து வருங்காலையில், மேல் சமுத்திரக் கரையி லுள்ள ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய புரியான துவாரகையை யடைந்தார். பிறகு அவ்விடத்தில் காளிகாபீடத்தையு மேற்படுத்தினர். பிறகு ஆமர்த்தம் ஸோமநாதம் முதலிய லிங்கங்களையும் தரிசித்தார். நர்மதா தீரத்தில் காவேரி நர்மதை இவை இரண்டிற்கும் ஸந்தியான மாந்தாதிருபுரத் தில் ஓங்காரேசுவரலிங்கத்தைத் தரிசித்துத் துதித் தார்.

## ஜகன்னாதத்தில் விமலாபீட ஸ்தாபனம்

பிறகு கீழ் சமுத்திரக் கரையிலுள்ள பூரி என்னும் ஜகன்னாதத்தில் ஸ்ரீகிருஷ்ண பகவானைத் தரிசித்து அவ்விடத்தில் விமலா பீடத்தை ஸ்தாபித்தார். பிறகு ஸ்ரீசங்கர குருநாதர் இன்னும் தக்ஷிண மார்க்கமாய் வந்து ஸ்ரீசைலத்தில் பிரமராம்பிகா ஸமேதரான மல்லிகார்ஜுன லிங்கத்தைத் தரிசித்து சிவனிடம் ஆனந்த பரவசராகி, சிவானந்தலஹரியையு மியற்றினர். அவ்விடம் பாஷண்ட அவைதிக, சைவ, வைணவ முதலிய மதங்களை சிஷ்யாள் மூலமாய்க் கண்டித்தார்.

## காபாலிகவதம்

இப்படியிருக்கும் ஸமயத்தில், காபாலிக மதத்தைச் சார்ந்த **உக்ரபைரவன்** என்ற ஒருவன் ஆச்சாரியருடைய விஜயத்தை சாஸ்திர யுக்திகளால் வெல்ல முடியாதிருப்பது கண்டு, அவருடைய திருமேனியையே ஒழித்துவிட வேண்டுமென்று எண்ணங் கொண்டான். ஆகவே ஒரு நாள் அவன் கபடபக்தியுடன் நமதாச்சாரிய மூர்த்திகளை யடைந்து, 'ஹே மஹாப்ரபோ' யான் கபாலியைக் குறித்து ஒரு யாகம் செய்கிறேன், அதற்குப் பூர்ணாஹுதியாக ஓர் சக்ரவர்த்தியின் தலையோ, அல்லது ஓர் ஆத்மஞானியின் தலையோ, ஹோமம் செய்யப்பட்டால்தான் யாகம் ஸித்தியாகும். சக்ரவர்த்தியின் சிரஸை யாசித்தால் எனது சிரஸே போய்விடும். இவ்விடம் ஸ்ரீஸன்னிதானமே பரம கருணாமூர்த்தியாய் விளங்கி வருகிறது. ஆகையால், அநுக்கிரஹித்தருள வேண்

டும்' என்று சரணுகதியடைந்தான். ஆச்சாரி யரும் தமது சரீரத்தைக்கொண்டு ஒருவர் உபகார மடைந்தால் அதைவிடத் தமக்கு வேறு பிர யோஜனம் என்ன விருக்கிறதென நினைத்து "ஹே காபாலிகா, நீ எனது சிஷ்யர்களிருக்கும் சமயத் தில் வந்தால் உனது காரியம் ஸித்தியாகாது. ஆகையால் நான் தனிமையாய் நிஷ்டையிலிருக் கும் ஸமயம் பார்த்து எனது சிரஸை வெட்டிக் கொண்டு போய்விடு' என்று உத்திரவளித்தார். அவனும் அவ்விதம் ஒருநாள் நமதாச்சாரியர் நிர்வி கல்ப நிஷ்டா சமயத்திலிருக்கும் போது, கத்தியை யுருவிக் கொண்டு குருமூர்த்தியின் சிரஸை வெட்ட யத்தனித்தான். இச்சமயம் நதியில் ஸ்னனஞ் செய்துகொண்டிருந்த பத்மபாதர் திடீரென்று நரஸிம்ம ரூபமாக ஓடிவந்து, அவனைக் கிழித் தெறிந்து விட்டு, வீராட்டஹாஸம் செய்துகொண் டிருக்கும் ஸமயத்தில், நமதாச்சாரிய மூர்த்திக்கு நிஷ்டை கலைந்து எதிரில் உக்ரரூபியான நரஸிம்ம மூர்த்தி காணப்படவே ஸ்தோத்திரத்தினுல் அவரை சாந்தப்படுத்தினுர். உடனே சாந்தரான பத்ம பாதரும் குருமூர்த்தியை நமஸ்கரித்து நின்றுர். இதைக் கண்ணுற்ற ஆச்சாரியர் தமது பிரிய சிஷ்யரான பத்மபாதரை நோக்கி அச்சமயம் அவருக்கு ஸ்ரீ நரஸிம்ம சுவாமி எவ்விதம் அநுக் கிரஹித்தார் என வினவ பத்மபாதரும் பின்வரு மாறு விஞ்ஞாபனம் செய்து கொண்டார். "நான் முன்னெரு ஸமயத்தில் ஒரு பர்வத சிகரத்தி லமர்ந்து நரஸிம்ம மூர்த்தியைக் குறித்துத் தவஞ் செய்தேன். அச்சமயம் அம்மலை வேடன் ஒருவன் என்னிடம் வந்து 'நீ ஏன் இக்காட்டில் தனிமை

யாக உட்கார்ந்து கொண்டிருக்கிருய்' என்று வினவ, நானும் 'நரஸிம்மத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன்' என்று பதிலுரைத்தேன்; பிறகு, 'அது மிருகந்தானே' யென்று என்னைக் கேட்க நானும் 'ஆம்' எனக் கூற என்னிடமிருந்து அந்த நரஸிம்மத்தின் லக்ஷணங்கள் யாவற்றையு மறிந்து பாதி மிருக ரூபமாகவும் பாதி மனுஷ்ய ரூபமாகவுமிருக்குமென்று நிச்சயித்தான். கடைசியாய் அவ்வேடன் மறுநாள் சாயங்காலத்திற்குள் அம்மிருகத்தைக் கொண்டு வருவதாய்ப் பிரமாணம் செய்தான். இவ்விதம் உறுதிமொழி கூறிவிட்டு அவன் காடு முழுவதும் தேட ஒரு ஸிம்மமாவது அகப்படவில்லை. அதனுல் அவன் அதிக மன வருத்தமடைந்தவனுய், "ஹே நரஸிம்ம மிருகமே! எனக்கு இக்காட்டில் ஸ்வாதீனமாகாத மிருகமே கிடையாது, நீ ஏன் எங்கேயோ மறைந்து திரிகின்ருய்" என்று கதறிக் கொண்டு தனது பிரதிக்ஞை வீணுகின்றதே யென்று பக்கத்திலுள்ள காடு முழுமையும் அலைந்து திரிந்தான். மறுதினம் ஸூர்யனும் அஸ்தமன காலத்தை யடைந்து விட்டான். பிரதிக்ஞை நிறைவேற்றும் ஸமயமும் நெருங்கி விட்டது, வேடனும் மனந்தாளாதவனுய் ஒரு கொடியை ஒரு மரத்தில் கட்டி அதைத் தன் கழுத்தில் சுருக்கிட்டுக் கொண்டு ஆத்மஹத்தி செய்துகொள்ள யத்தனித்து "ஹே நரஸிம்மமே! என்னை மோசம் செய்தாயே! இனி நான் எங்ஙனம் பிராணனை வைத்துக்கொள்வது" என்று ஓவெனக் கதறினுன். அவன் உரக்கக் கத்திய சப்தம் முடிவாகுந் தருணத்தில் ஸ்ரீ நரஸிம்ம மூர்த்தியும் அர்த்த மானுஷ்ய ரூபத்துடன் சங்கு

சக்ரபாணியாய் எதிரில் ஆவிர்ப்பவித்தார். உடனே வேடன் அத்தியானந்த முற்றவனுய், அந்த ஸிம்மத்தை தனது கழுத்தில் சுறுக்கிட்டுக் கொண்ட கொடியினுலேயே கட்டி நையப் புடைந்து கரகரவென்று என்னிடம் இழுத்து வந்து "ஓய் பிராமணரே! இதோ நரஸிம்ம மிருகம், இதைப் பெற்றுக்கொள்ளும்" என்று சொன்னுன். ஆனுல் எனது கண்ணுக்கோ கொடி மாத்திரம் புலப் பட்டதே தவிர வேறு ஒன்றும் தென்படவில்லை. சற்று நேரங் கழித்து அவ்வேடனும் மறைந்து விட்டான். உடனே நானும் அதிக துக்கங் கொண்டவனுய் அவ்வேடனுக்குப் பிரத்தியக்ஷ மான தெய்வம் எனது புலன்களுக்குப் பிரத்தியக்ஷ மாகக் கூடாதோ வென்று பலவாறு கதற, எனக்கும் ஈசன் பிரத்தியக்ஷமாகி "அப்ப! இதுகாறும் பிரம் மாதிகளான யோகிகள் கூட இவ்வேடனைப் போல் அவ்வளவு ஆதுரமாய் என்னைத் தியானித்ததில்லை. ஆகையால் அவனது பக்தியால்தான் உனக்கும் பிரத்தியக்ஷமானேன். இனி நீ என்னை எச் சமயத்தில் ஸ்மரிக்கின்றனையோ அச்சமயத்தில் உனக்கு அநுக்கிரஹிப்பேன்" என்று கூறி மறைந் தார். தற்சமயம் இந்த உக்ர பைரவன் வந்ததும் அவன் கிழிக்கப் பட்டதையும் நானறியேன். எல்லாம் ஸத்குரு ஸன்னிதானத்தின் அநுக் கிரஹமே"

என்று பத்மபாதர் தனக்கு ஸ்ரீ நரஸிம்ம மூர்த்தியின் பிரஸாதம் கிடைத்த வரலாற்றைக் கதாரூபமாய் வெளியிட்டார். இதைக் கண்ட பைரவ மதத்தினர்களெல்லாரும் ஸ்ரீ ஆச்சாரி யாளை சரணுகதி யடைந்தார்கள்.

## ஹஸ்தாமலகர்

இவ்விதம் க்ஷேத்திரங்களைத் தரிசித்தும், துர் மதங்களைக் கண்டித்தும், தேச சஞ்சாரம் செய்து வருங்கால், நமது ஆச்சாரிய மூர்த்திகள் கோ கர்ண க்ஷேத்திரத்தைத் தரிசனம் செய்துவிட்டு, மூகாம்பிகா க்ஷேத்திரத்தை யடைந்தார். அவ் விடம் உத்தம குலத்திலுதித்தவர்களான ஒரு தம்பதிகள், மரித்துக் கிடக்கும் தங்களுடைய ஒரே புத்திரனை மடிமேலமர்த்தித் துக்கித்துக் கொண் டிருந்தார்கள். இதைக் கண்ட ஆச்சாரியரும் பரிதாபமடைந்தவராய், அக்குழந்தையைத் தூக் கத்தினின்று விழித்துக்கொள்வது போல் பிழைக் கும்படி அருளினுர். பிறகு நமது குருமூர்த்திகள் மூகாம்பிகையைத் தரிசனம் செய்துவிட்டு ஸ்ரீபலி யென்றவோர் அக்ரஹாரத்தை யடைந்தார். அங்கு ப்ரபாகரர் என்ற ஓர் உத்தம பிராமணர் பதின் மூன்று வயதான தன் புதல்வனை ஆச்சாரிய ஸன்னதிக்கு அழைத்து வந்து "ஹே ஸத்குரு! இச் சிறுவன் எனது புத்திரன், இவன் பிறந்தது முதற்கொண்டு ஒரு வார்த்தையாகிலும் பேசாமல் ஊமையாகவே யிருந்து வருகிருன். இவனைப் பேசும்படி அநுக்கிரஹித்தருள வேண்டும்" என்று பிரார்த்திக்க குருநாதரும் அக்குழந்தையைப் பார்த்து "நீ யார்" என்று கேட்டார், உடனே அக் குழந்தையும் வேதாந்த தத்துவத்தைப் பொழியும் பன்னிரண்டு சுலோகங்களால் தன் ஆத்ம ஸ்வ ரூபத்தை யறிவித்தது. அப்பாலகன் உள்ளங் கை நெல்லிக் கனிபோல், தனது இளம் பிராயத் திலேயே, ஆத்ம ஸ்வரூபத்தை யறிந்துவிட்டதால்,

அவனுக்கு ஹஸ்தாமலகர் என்று பெயரிட்டார் கள். அப்பன்னிரண்டு சுலோகங்களுக்கும் நமது ஆச்சாரிய மூர்த்தியே பாஷ்யமியற்றி யிருக் கின்ருர். தனது ஊமைப் புதல்வன் பேசியதைக் கண்டு ஆனந்தமுற்ற ப்ரபாகரர் அவனை வீட்டிற்கு அழைத்துச் செல்ல அங்கு அவன் ஒரு வார்த்தை யாவது பேசவில்லை. பிறகு அப்பிராம்மணுேத் தமரும் இச்சிறுவனை குரு ஸன்னிதானத்திலேயே ஒப்புவித்து விட்டார். அன்று முதலே ஹஸ்தா மலகர் ஆச்சாரியருக்கு சிஷ்யராஞர்.

## தோடகாச்சாரியர்

ஆச்சார்யரின் முக்கிய சிஷ்யர்களில் மற்ருெரு வரான ஆனந்தகிரி என்பவர் புத்தி ஸாமர்த்தி யத்தை அதிகமாய்ப் பெற்றில்லாவிடினும், தமது குருவிற்கு வேண்டிய காரியங்களை அதிபக்தி சிரத்தையுடன் நடத்தி வந்தார். ஒரு நாள் சாந்தி பாடம் ஆரம்பிக்கும்போது, அவர் வராததினுல் ஆச்சாரியர் சற்றுத் தாமதித்தார். மற்ற சிஷ்யர் கள் இதைப்பார்த்து, மந்தனுயுள்ள ஒருவனுக்காக ஏன் தாமதிக்க வேண்டுமென்று நினைத்தார்கள். இதையறிந்த ஆச்சாரியர் மனதினுல் ஆனந்த கிரியை ஆசிர்வதிக்க, அவரும் தோடகம் என்ற விருத்தத்தில் எட்டு சுலோகங்களைச் சொல்லி ஆச்சாரியாளை ஸ்தோத்திரம் செய்து கொண்டு ஆச்சாரிய ஸன்னிதானத்திற்கு அதிவேகத்துடன் வந்து சேர்ந்தார். இந்த ஸ்தோத்ரத்திற்கு தோடகாஷ்டகம் என்ற பெயர் ஏற்பட்டது. இதைக் கண்ணுற்ற மற்ற சிஷ்யர்கள் ஆச்

சாரியரை நமஸ்கரித்து அபராதத்தை க்ஷமித்தருளும்படி வேண்டினர்கள். அதனல் அவருக்கு தோடகாச்சாரியர் என்று பெயர் வாய்ந்தது.

## அத்தியாயம் 8

### சிருங்ககிரியில் சாரதாபீட ஸ்தாபனம்

பிறகு ஸ்ரீ சங்கராச்சாரியர் கர்னுடக தேசத்திலுள்ள சிருங்ககிரி க்ஷேத்திரத்தையடைந்தார். அவ்விடம் மண்டனமிச்ரருடைய பத்னியான ஸரஸவாணியை எப்போதும் ஸான்னித்யம் பெற்றிருக்குமாறு ஸ்தாபனம் செய்தார். அதுவே சாரதா பீடமாகும். அங்கு ஓர் ஐதிஹ்யம் சொல்வதுண்டு. அதாவது முன் ஆச்சாரியர் மண்டனமிச்ரரை வாதத்தில் ஜயித்து ஸரஸவாணியைத் தன் பின்னரே வரும்படி பிரார்த்தித்ததாயும், அதற்கு ஸரஸ்வதியும் தன்னே எவ்விடம் ஆச்சாரியர் திரும்பிப் பார்க்கின்றுரோ அவ்விடத்திலேயே நின்று விடுவேனென்றுரைத்ததாயும், பின்னர் ஸஞ்சாரம் செய்துகொண்டு துங்கபத்திரை நதியில் வரும்போது ஸரஸவாணியின் பாதஸரங்களில் மணல் புகுந்து சப்தமில்லாமற் போய்விட்டதால் ஆச்சாரியர் திரும்பிப் பார்க்க, ஸரஸவாணியும் அவ்விடத்திலேயே ஆலயங்கொண்டாளென்றும் சொல்லுகிறுர்கள். அவ்விடத்தில் நமதாச்சாரியர் கைலாஸத்திலிருந்து கொண்டு வந்த ஐந்து லிங்கங்களிலொன்றுன போக லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தார்.

## ஆர்யாம்பிகையின் அந்திய காலம்

சிருங்ககிரியில் சாரதாபீடத்தை ஸ்தாபனம் செய்துவிட்டுத் திரும்புங்கால், பத்மபாதாச்சாரியர் குருவின் ஆக்ஞை பெற்று ராமேசுவரம் சென்றுர். இதனிடையில் ஆச்சாரியருடைய மாதாவான ஆர்யாம்பிகைக்கு அந்தியகாலம் நெருங்கி விட்டது. உடனே அவ்வம்மையும் தனது புத்திரனை ஸ்மரித்தாள். இதையறிந்த நமதாச்சாரியர் யோகமார்க்கத்திஞல் காலடியை யடைந்தார். தமது தாய் மோக்ஷமேக ஸ்ரீ சங்கரர் நிர்க்குண பிரம்மபரமாக சுலோகங்களைச் சொல்ல, அது அவரது தாயின் மனதிற்கு எட்டவில்லை. பிறகு ஸகுணபரமாக பரமேசுவரரைத் துதிக்க, பயங்கரமான சிவகணங்கள் தாயை கைலாஸ மழைத்துப்போக வந்துவிட்டன. இதைக்கண்ட ஆர்யாம்பாள் பயந்தவளாய்ச் சாந்தாகாரமான ஸ்ரீ விஷ்ணு ஸ்தோத்திரம் சொல்லும்படி கேட்க, ஆச்சாரியரும் அவ்விதமே செய்ய அம்மூர்த்தியைத் தியானித்து வைகுண்டமேகினுள். அவ்வம்மைக்கு வேறு புத்திரர்களில்லாததால் முன் பிரதிக்ஞை செய்தபடி, தாய்க்கு கிருத்தியம் செய்ய வாரம்பித்தார். இச்சமயம் அவ்வூரார் யாவரும் ஸன்னியாஸியானவர் கிருத்தியம் செய்யலாகாதென்று தடுத்து, உதவிக்கு ஒருவரும் வராமலிருந்துவிட்டார்கள். இதைக்கண்ட நமதாச்சாரியரோ தமது தாயின் சரீரத்தைத் துண்டித்து கொஞ்சங் கொஞ்சமாய் தமது வீட்டுக் கொல்லையில் கொண்டு சேர்த்தார். உடனே அகில் கட்டையைத் தேய்த்து அதிஞலுண்டான நெருப்பைக்

கொண்டு அச்சரீர பிண்டங்களைத் தகனம் செய்து விட்டார். பிறகு அக்கிராமத்தினர் செய்த அம்மஹா ஹிம்ஸா பாபத்திற்காக நமதாச்சாரியர் கீழ்வரும் சாபத்தை யிட்டார். "இக்காலடிக்கு இனி ஒரு ஸன்யாஸியும் வரக்கூடாது. நான் எவ்விதம் எனது தாயின் சரீரத்தை ஸம்ஸ்காரம் செய்தேனோ, அவ்விதமே, இனி இவ்வூரார் யாவரும் செய்யவேண்டும்" இவ்விதம் சாபமிட்டுவிட்டு நமதாச்சாரியர் மறுபடியும் தேச யாத்திரைக்காகப் புறப்பட்டார்.

## பஞ்சபாதிகா வியாக்யானம்

ஸ்ரீ சங்கர குருமூர்த்தி காலடியிலிருந்து புறப்படவே, பத்மபாதரும் தனது குருவையடைந் தார். பத்மபாதர் முன்னரே ஸூத்திர பாஷ்யத் திற்கு ஒரு வியாக்கியானம் செய்திருந்தார். அவ் வியாக்கியானத்தின் ஐந்து பாதங்களை ராமேசு வரம் போகுமுன் ஒருதடவை தமது குருமூர்த்தியி னிடம் வாசித்துக் காட்டியிருந்தார். ராமேசுவரம் போகும்போது, அவ்வியாக்கியானத்தைத் திரு வானைக்காவலிலுள்ள தனது மாமனுடைய வீட்டில் வைத்துவிட்டுப் போனார். அம்மாமனோ ஒரு பெரிய வேதாந்தத் துவேஷி. அவரது வீடு ஒரு சமயம் தீப்பற்றி எரியும்போது, வேண்டுமென்றே அப்புத்தகத்தை வீட்டினுள்ளேயே வைத்தெரித்து விட்டான் மாமன். பத்மபாதர் திரும்பி வந்து புத்தகத்தைக் கேட்க, அப்புத்தகத்தோடு தனது வீடும் எரிந்துவிட்டதென்று பரிதாபத்துடன் பாசாங்கு செய்தான். இதைக் கேட்டதும், பத்ம பாதர் மிகவும் துக்கங்கொண்டு, ஆச்சாரியரிடத்

தில் இவ்விஷயத்தை விஞ்ஞாபனம் செய்ய ஆச்சாரியர் தாம் ஒரு தரம் கேட்ட பாகத்தை மாத்திரம் அப்படியே ஒப்புவித்து எழுதிக் கொள்ளும்படி ஆக்ஞாபித்தார். அது தான் இன்னும் பஞ்சபாதிகா வியாக்கியானம் என்று வழங்கிவருகிறது.

### துர்மதங்களைக் கண்டித்தல்

ஆச்சாரியர் இவ்விதம் அனேக தேசங்களில் சஞ்சாரம் செய்து கொண்டிருக்கும்பொழுது எக் காலத்திலும் நாலாயிரம் சிஷ்யர்கள் வேதாந்த காலக்ஷேபம் செய்துகொண்டு பின் தொடர்ந்து வந்தார்கள். ராஜ ராஜாக்களான **சுதன்வா** முதலிய சக்கிரவர்த்திகள் சத்ரம், சாமரம், தோரணம் முதலிய எண்ணிறந்த பிருதுகளைத் தாங்களே வகித்து, அஷ்டாதச வாத்தியங்கள் முழங்க, அநுயாத்ரா கைங்கர்யங்களைச் செய்து வந்தார்கள். இவ்விதம் கர்னுடக தேசத்தில் ஸஞ்சாரம் செய்யுங்கால், **கிரகசன்** என்ற ஒரு பைரவன் ஆச்சாரியரிடம் அனேக விதங்களாக வாதம் செய்தும் முடியாமல், கடைசியில் அவரை ஸம்ஹாரம் செய்துவிட எண்ணங்கொண்டு, இக் காரியத்திற்காக கபாலியை மந்திர சக்தியினுல் ஏவினுன். கபாலியும் பிரசன்னமாகி, நமதாச் சாரிய மூர்த்தியைப் பார்த்து “என் மூர்த்தியை நான் எங்ஙனம் பக்ஷிப்பது” என்று சொல்லி, அக்கிரகசனையே பக்ஷித்துவிட்டார். நமதாச் சாரிய சிஷ்யகணங்களான சுரேசுவரர், பத்மபாதர் முதலிய ஸிம்மங்களினுலேயே அக்காலத்திலிருந்த

எழுபத்திரண்டு துர்மதங்களும் அடக்கப்பட்டுப் போயின.

## ஜம்புகேசுவரத்தை யடைதல்

அக்காலத்தில் உலகில் பாபம் மேலிட்டு, துர்த் தேவதைகளின் ஆராதனம் அதிகமாயிருந்தமை யால், உத்தம தேவதா ஸன்னதிகளில் தாபம் பொறுமல் உக்ரகலைகள் ஏற்பட்டிருந்தன. ஜனங் களோ அக்கலைகளைத் தாங்கவும், தேவதைகளின் ஸன்னிதானங்களைத் தரிசிக்கவும் முடியாமலிருந் தனர். அவ்விதமான க்ஷேத்திரங்களில் ஜம்புகேச் வரமும் ஒன்று. அந்த க்ஷேத்திரத்தின் கண் ணுள்ள அகிலாண்டேச்வரி அம்மனும் அச்சமயம் அதிஉக்ரரூபமாய் விளங்கியதால், எதிரிலெவரும் போகவியலாதிருந்தது. இச்சமயம் நமதாச்சாரி யர் ஜம்புகேசுவரத்தை யடைந்து அவ்விடத்தில் விக்கினேசுவர மூர்த்தியை தேவியின் சன்னிதியில் அம்பாளுக்கெதிரில் ஆவாஹனம் செய்தார். தேவி யும், தனது கலையைக் குறைத்துக் கொண்டாள். உடனே ஸ்ரீ சங்கரரும் எதிரே சென்று அக்கலை களை யெல்லாம் ஆகர்ஷித்து, ரத்னமயமான தாடங்கமென்னும் இரு கர்ணாபரணங்களில் பிர திஷ்டை செய்து, அம்பிகைக்குச் சாற்றினர். இன்றைக்கும் அத்தாடங்கங்களிலேயே அவ்வம் பிகை ஸான்னித்தியம் அடைந்து உலக மக்களை போஷித்து வருகிருள். அஃதில்லாது அத்தேவிக் குப்பூஜை நடப்பதில்லை. அதை எப்பொழுதாவது ஜீர்ணோத்தாரணம் செய்விக்க வேண்டுமாயின், அவ்வாச்சாரிய பரம்பரையான ஜகத்குரு காம கோடி பீடாதிபதி மூர்த்திகளே அவற்றைச் செய்

வித்துத் தங்களுடைய திருக்கரங்களால் அவ்வம் பிகைக்குச் சாற்ற வேண்டும்.

### இதர விடங்களில் யந்திர ஸ்தாபனங்கள்

இங்ஙனமே மேற்கு சமுத்திரக் கரையிலுள்ள மூகாம்பிகா க்ஷேத்திரத்திலும் நமதாச்சாரியர் ஒரு யந்திர ஸ்தாபனம் செய்திருக்கிறார். ஒரு ஸமயம் சிஷ்யர்களுடன் பதரீக்ஷேத்திரத்திற்குப் போயிருந்த காலத்தில், அவ்விடம் தமது சிஷ்யர் கள் குளிரால் வருந்த, அங்கு நம் ஆச்சாரியர் மந்திர சக்தியால் உஷ்ண குண்டங்களை நிர்மாணம் செய்வித்தார். பதரீயில் இன்றைக்கும் இவ்வுஷ்ண குண்டங்களைக் காணலாம். திருப்பதி யென்னும் ஸ்ரீ வேங்கடேசுவர க்ஷேத்திரத்தில் தனாகர்ஷண யந்திரத்தை ஸ்தாபித்திருக்கிறார். சென்னைக் கடுத்த திருவொற்றியூரில் ஸ்ரீ திரிபுரஸுந்தரீ யம்மன் மஹா உக்கிர கலையுடனிருந்தாள். அங்கு "வன துர்க்கை" யென்ற மற்றோர் உக்கிர தேவதை யும் ஜனங்களைத் தகித்துக் கொண்டிருக்க, அத் தேவதையை மந்திர சக்தியால் பந்தனம் செய்து, ஒரு கிணற்றில் இருத்தி அதன் பிரார்த்தனைக் கிணங்க, வருஷத்திற் கொருமுறை பூஜை செய் விக்கும்படி ஏற்பாடு செய்தார். இன்றைக்கும் வருஷத்தில் ஒருநாள் தான் அத்தேவதைக்கு பூஜை நடக்கின்றது. அவ்விடம் அதிக உக்கிர கலையுட னிருந்த திரிபுர ஸுந்தரியையும் நமதாச்சாரியர் ஸௌம்யமூர்த்தி யாக்கினார். அவ்வாலயத்தில் ஸ்ரீ ஆச்சாரிய மூர்த்திகளுடைய ஸ்தானங்கள் இன்றைக்கும் தெரிகின்றன.

## ஸ்ரீ சிதம்பரத்தில் மோக்ஷலிங்க ஸ்தாபனம்

பிறகு ஸ்ரீ சிதம்பர க்ஷேத்திரத்தின்கண்தான் ஸ்ரீ மஹா கைலாஸத்தினின்று கொண்டு வந்த மோக்ஷலிங்கத்தை ஸ்தாபித்து சாசுவதமாய் பூஜிக்கும்படி ஏற்பாடு செய்தார். ஈசனுடைய அபார கருணையால் எல்லா விதங்களினுலும் உலகிற்கு உபகாரம் செய்துவிட்டு, இறுதியில் ஸ்ரீ காஞ்சி க்ஷேத்திரத்தை யடைந்தார். இவ்விஷயத்தைக் கேரளீய சங்கரவிஜயம் பின்வருமாறு கூறுகின்றது. सर्वज्ञः शिष्यसंयुक्तः शंकरोदेशिकेश्वरः ॥ भूमिंप्रदक्षिणीकृत्यभूयः कांचीपुरं गतः ॥

---

## அத்தியாயம் 9

### ஸ்ரீ காஞ்சிபுரத்தின் விசேஷ மகிமை

### காமகோடி பீடஸ்தாபனம்

ஸ்ரீ காஞ்சி யென்பது பூதேவிக்கே (காஞ்சி யென்னும்), ஒட்டியாண ஸ்தானம். ஆதலால் ஸ்ரீ சங்கரர் மந்திர சாஸ்திரக்கிரமமாக காஞ்சி நகரத்தை யடைந்தபொழுது பூமத்திய ஸ்தானத்தை யடைந்தார். இவ் விஷயத்தையே

“अथक्षितेरद्भुतकाञ्चिमैक्षत” என்று நூல்கள் கூறுகின்றன. பூலோகத்தில் ஸப்த மோக்ஷபுரிகள் ஏற்பட்டிருக்கின்றன. அவைகள் अयोध्या, मधुरा माया, काशी, काञ्ची, अवन्तिका, पुरी द्वारवतीचैव सप्तैते, मोक्षदायकाः என்ற பிரகாரம் அயோத்தி, மதுரா, மாயை என்ற ஹரித்துவாரம், காசி, காஞ்சி,

அவந்தி என்ற உஜ்ஜயினீ, துவாரவதி யென்ற துவாரகை என்ற நகரங்களேயாம். இவ்வேழும் பராசக்தியினது பீடங்கள். ஸ்ரீ பராசக்தியின் ஸ்வரூபத்தை ஸ்ரீ ஆச்சாரியருடைய ஸௌந்தர்ய லஹரி கீழ்வருமாறு கூறுகின்றது.

"गिरामहुर्देवीं द्रुहिणगृहिणीमागमविद:
हरे: पत्नीं पद्मां हरसहचरींमद्रितनयाम् ।
तुरीया कापि त्वं दुरधिगमनिस्सीममहिमा
महामायाविश्वं भ्रमयसि परब्रह्ममहिषी ॥

பராசக்தியினது இவ்வேழு பீடங்களும் முறையே பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், காலம், திக்கு இந்த ரூபங்களாய் அமைந்துள்ளன. இவ் விஷயத்தையே ஸௌபாக்கிய சிந்தாமணி யென்ற மந்திர சாஸ்திரமானது கூறுகின்றது.

"अयोध्यादिषु पीठेषु पृथिव्यादिष्वनुक्रमात् ।
बिलान्तेषुच सर्वेषु काशी कांञ्चीयतोऽधिके ॥

இந்த கிரமத்திலேயே ஸ்ரீ காஞ்சிபுரியானது ஆகாசபீடமாகின்றது. பின்னிருக்கும் திக் காலங் களும் ஆகாயத்தில் அந்தர்பாவத்தை யடைந் திருப்பதாக வேதாந்தங்கள் கூறுகின்றன. ஆகை யால் அம்பிகையானவள் "तयोस्तुकाञ्ची नगरी बिलद्वार समन्विता । तत्कामकोष्ठकंनाम.........என்றபடி இவ்விடத்தில் பிலாகாச ரூபியாய் இருக்கின்றனள். இந்த க்ஷேத்திரத்தையே பிரபஞ்சரூபமான பர தேவதைக்கு நாபி பிலமென்று சாஸ்திரங்கள் நிர்ணயிக்கின்றன. நாபியும் சரீரமென்னும்

க்ஷேத்திரத்திற்கு ஜீவாதாரமான மூலமாயும், மத்தியஸ்தானமாயுமிருக்கின்றது.

ஆகையால் அத்வைத ஆத்மஞான பீடங்களுக்கு தமது குருவின் ஆக்ஞைப்படி, உலகத்திற்கே குருவான ஸ்தானமாகப் பிரதிஷ்டை செய்யவேண்டியே நமதாச்சாரிய பகவத்பாதர் காஞ்சி க்ஷேத்திரத்தை யடைந்தார்.

"सुरधामास तत्कारयित्वा परविद्याचरणानुसारिचित्रं ।"
என்று ஸ்ரீ மாதவீய சங்கரவிஜயமும் கூறுகின்றது.

அக்காலம் ஸ்ரீ காஞ்சி க்ஷேத்திரத்தை ராஜஸேனன் என்னும் சோழசக்கிரவர்த்தி அரசு புரிந்து வந்தான். அந்த ராஜஸேனனும் நமதாச்சாரியருடைய சரணாரவிந்தங்களில் எக்காலத்திலும் வீற்றிருந்து, அவரது ஆக்ஞைகளை அவ்வப்போது நிறைவேற்றி வந்தான். பராவித்யையாகவும் ஸ்ரீ சக்கிர ரூபமாகவுமிருக்கும் ஸ்ரீ பராசத்தியான காமாக்ஷி அம்பிகையின் ஆலயத்தையும் காஞ்சி நகரத்தையும் பிரதிஷ்டாபனம் செய்தார். ஸ்ரீ ஏகாம்பரநாதர், ஸ்ரீ வரதராஜர் முதலிய ஆலயங்களையும் நிர்மாணம் செய்வித்தார்.

ஸ்ரீ காஞ்சி நகரத்தை ஸ்ரீசக்கிரமென்னும் யந்திர ராஜரூபமாக பிரதிஷ்டைசெய்து இதர சிவ விஷ்ணு முதலிய தேவதா மூர்த்திகளை ஒவ்வொரு சந்திர கோணங்களிலும் பிரதிஷ்டை செய்து, மத்தியமான பிந்து ஸ்தானத்தில், ஸ்ரீ காமகோடி பீடத்தைப் பிரகாசிக்கும்படி யருளினர். இன்றைக்கும் அந்நகரிலுள்ள எண்ணிறந்த எல்லா

தேவாலயங்களின் ப்ரதான கோபுரங்களும் ஸ்ரீ காம கோடி பீடத்தின் அபிமுகமாகவே ஏற்பட்டிருக் கின்றன. அதாவது ஒரு தேவாலயமானது ஸ்ரீ காம கோடி பீடத்திற்குக் கீழ்த்திசையிலிருந்தால் அத் தேவாலயத்தின் ப்ரதான கோபுரம் மேற்கு நோக்கிக்கொண்டிருக்கும், அவ்விதமாகவே வடக்கி லிருந்தால் தெற்கு நோக்கியும், வடகிழக்கிலிருந் தால் தென்மேற்கை நோக்கியுமிருக்கும். ஆகை யால் காஞ்சியிலுள்ள இதர தேவாலயங்களுக்கு அவைகளுக்காக வேறுபட்ட திக்குகள் கிடையா. அவைகள் ஸ்ரீ காமகோடி பீடத்தின் திக்கையே யநுசரித்திருக்கின்றன. அதுவுமல்லாது இன்றைக் கும் ஸ்ரீ காஞ்சிபுரியில் ஒவ்வோர் ஆலயத்தின் உத்ஸவகாலங்களில் அந்தந்த தேவதா மூர்த்தி கள் தத்தம் ஆலயங்களைச் சுற்றுவதைவிட்டு, ஸ்ரீ காமகோடியையே பிரதக்ஷிணம் செய்கின்றன. ஸ்ரீ ராமானுஜ ஸம்பிரதாயத்தைப் பின்பற்றி, ஸ்ரீ பாஞ்சராத்ரப் பிரகாரம் ஆராதனங்கள் நடை பெறும் ஸ்ரீ வரதராஜனுடைய ஸன்னிதானம் ஸ்ரீ காமகோடி பீடத்திற்கு மேற்கே இரண்டு மைல் தூரத்திலிருக்கின்றது. அந்த ஸ்ரீ வரதராஜப் பெருமாளுக்கு உத்ஸவமாயினும், அப்பெருமாள் ஸ்ரீ சிவகாஞ்சிக்கு எழுந்தருளி, ஸ்ரீகாமகோடி பீடத்தைப் பிரதக்ஷிணம் செய்து, ஸ்ரீ ஜகத்குரு ஆச்சாரியர் மடத்திற்கு எதிரில் கங்கைகொண்ட சோழன் என்ற மஹாராஜனுல் நிர்மிக்கப்பட்ட மண்டபத்தில் வீற்றிருப்பது வழக்கம். இங்ஙனமே எல்லாத் தேவாலயங்களிலும் வழக்கமேற்பட்டிருக் கின்றது. இவ்விதம் ஸ்ரீ சங்கரகுருமூர்த்திகள் பிந்துஸ்தானமாக ஸ்ரீ காமாக்ஷி ஆலயத்தில்

ஸ்ரீ காமகோடி சக்கிரப் பிரதிஷ்டை செய்வித்தனர். எல்லா மஹா க்ஷேத்திரங்களிலுமேற்பட்டிருந்த வண்ணம், அங்கும் பரிவார தேவதைகள் கலியின் பாபங்களைப் பொறுக்காமல், உக்ரகலைகளாய் நின்றன. ஸ்ரீ மஹா தேவியின் பிரஸாதமும் ஜனங்களால் கிட்ட முடியாதிருந்தது. அவ்வுக்ர கலைகளையும் சாந்தப்படுத்தி ஸ்ரீ பிலரூபிணியான ஜகன் மாதாவை ஸ்ரீ சக்கிரராஜமான ஸ்ரீ காமகோடி யந்திரத்தில் ஆவிர்ப் பாவத்தை யடையும்படி அநுக்கிரஹித்தார். ஸ்ரீ காமகோடி பீடமும் ஒரேயிடத்திலிருந்து உலகத்திற்கு அநுக்கிரஹம் செய்வதோடு மாத்திரம் நில்லாமல், எங்கும் அநுக்கிரஹம் செய்யவேண்டி மேரு ப்ரஸ்தார ரூபமாயும் காமகோடியைப் பிரதிஷ்டை செய்து தமது ஆத்ம பூஜைக்காக வைத்துக் கொண்டார்.

சித்ரூபிணியான ஸ்ரீ பராசக்தியின் பீடமானதாலும், “सचामर रमावाणी सव्यदक्षिणसेविता” என்றவாறு ஸரஸ்வதீ தேவியானவள் சாமரத்துடன் ஸேவிக்கின்ற பீடமானதாலும், அந்த ஹேம காமாக்ஷியின் ஸன்னிதானத்தி லேற்பட்டிருந்த ஸர்வக்ஞ பீடத்தில் அதுவரையில் ஒருவரும் ஆரோஹணம் செய்ததில்லை. அப்படியிருந்தும் ஸ்ரீ பரதேவதையின் ஆக்ஞையின்படி நமதாசாரிய மூர்த்திகள் அதில் ஆரோஹணம் செய்யத் தீர்மானித்தார். உடனே ராஜஸேனன் முதலிய சக்கிரவர்த்திகள் பரதகண்டம் முழுவதும் இவ்விஷயத்தைத் தெரிவித்தார்கள். இதர மதவாதிகள் யாவரும் ஜயிக்கப்பட்டனராயினும், நமதாச்சாரியர் ஸர்வக்ஞ பீடாதி ரோஹணம் செய்யப்

போவதைக் கேட்டு மனம் ஸஹியாமல் காஞ்சியில் கூடுவாராயினர்.

---

## அத்தியாயம் 10

### பரகாயப் பிரவேசம்

இச்சமயத்தில் ஸரஸ்வதிதேவி அசரீரிணியாய் ஆவிர்ப்பவித்துக் கூறுவாளாயினள். "ஹே சங்கர மூர்த்தி! எந்த சாஸ்திரத்திலும் கலையிலும் தங்களை வெல்ல எவராலும் முடியாதாயினும், தாங்களறியாத சாஸ்திரமுமொன்றுளது. அதுவும் அறுபத்துநான்கு கலைகளிலொன்ருகும். அதை யறியாத தங்களை ஸர்வக்ஞரென்று எங்ஙனம் ஏற்றுக்கொள்வது? ஆகையால் தாங்கள் இப்போது ஸர்வக்ஞபீடமேற வியலாது. அந்தச் சாஸ்திரமானது வாத்ஸ்யாயன மஹரிஷியால் இயற்றப்பட்ட கிருகஸ்தாசிரமத்திற்குரிய சாஸ்திரமே. தாங்கள் பிரம்மசரியாசிரமத்தி லிருந்தே ஸன்யாஸங்கொண்டதால் அது தாங்கள் அறியக் கூடாத சாஸ்திரமன்ரோ?"

இவ்விதம் ஸரஸவாணி விளம்பியதும், நமதாச்சாரியரும் "ஹே ஸரஸவாணி நீ சொல்லும் சாஸ்திர வாதத்திற்கு எனக்கின்னும் ஆறுமாதங்கள் அவகாசம் கொடுக்கவேண்டும். அப்படிச் செய்தால் என் ஆசிரமத்திற்கும் தோஷம் வராது; அந்த சாஸ்திரத் திலும் வாதாடி ஜயிக்கின்றேன்" என்று பகர்ந்தார். வாணியும் அவ்விதமே உத்திரவளிக்க ஆச்சாரியரும் பத்மபாதர் முதலிய சிஷ்யர்

களுடன் ஆலோசித்துப் *பரகாயப் பிரவேசஞ் செய்யத் தீர்மானித்தனர். வர்ண தர்மங்களும், ஆசிரம தர்மங்களும் இந்த சரீரத்தையே பின் பற்றின வல்லாது, அஜ்ஜீவன் வேறு சரீரத்தை யடைந்துவிட்டால் அங்கும் அந்தத் தர்மங்கள் சாஸ்திர ரீதியாக எவரையும் கட்டுப்படுத்த மாட்டா. ஒரு பிராமணனுடைய ஜீவன் சண்டாள ஜன்மத்தை யடைந்துவிட்டால், முன் ஜன்மத்தி லேற்பட்டிருந்த ஸந்தியாவந்தனுதி கருமங்கள் அச்சண்டாளனுக்கு ஏற்படாதல்லவா? ஆகை யால் நீசத் தொழில் புரிவதில் அஜ்ஜீவனுக்குத் தோஷமுமில்லை. சாஸ்திர ரீதியாக ஸன்யாஸ ஆசிரமம் இச்சரீரத்தோடு கூடிய ஜீவனுக்கே யொழிய வேறு சரீரத்தில் இந்த ஜீவன் பிரவே சித்துவிட்டால் அப்பொழுது அச்சரீரத்திற்கு தோஷமில்லை. ஆதலால் தனது ஸன்யாஸ ஆசிர மத்தின் சரீரத்தைவிட்டு, கிருஹஸ்தாசிரமத்தில் பூர்ணமாய் இகலோக ஐசுவரியாதி ஸுகங்களைப் பெற்ற ஒரு சரீரத்தில் பிரவேசித்து, அதன் மூலமாய் கிருஹஸ்தாசிரம தர்மங்களையுமறிந்து, ஸரஸ்வதியை ஜயித்து பின்னர் தேவியின் ஆஞ்ஞையின்படி ஸர்வக்ஞ பீடாதிரோஹணம்

* ஸ்ரீமாதவீய சங்கரவிஜயத்தில் பரகாயப் பிரவேசம் மண்டனமிசிர கண்டனமானவுடன் நடந்ததென்று சொல்லப் பட்டிருக்கிறது. அதற்கு மூலமான வியாஸாசலியம், கேரளீயம், குருரத்ன மாலிகை முதலிய கிரந்தங்களில் ஸர்வக்ஞ பீடாதி ரோஹணம் செய்யும் ஸமயத்திலேதான் ஸரஸ்வதியானவள் வாதத்திற்கு வந்ததாகவும், அதற்காக நமதாச்சாரியரால் அப் போது பரகாயப்பிரவேசம் செய்யப் பட்டதாகவும் சொல்லப் பட்டிருக்கின்றது.

செய்ய நமதாச்சாரியர் தீர்மானித்தார்கள். ஸ்ரீ சங்கர குருமூர்த்தி உலகத்திற்கெல்லாம் பிதாவான உமாபதியின் அவதாரமாகையால், பிரபஞ்சம் என்ற கிருஹத்திற்கே முதல் கிருஹஸ்தராகிருர். ஆயினுமவர் மனுஷ்யாவதாரத்தில் அந்தக் கிருஹஸ்த தர்மங்களை யறியாதவர் போலிருந்து, பிறகு அதையுமறிய எவ்விதம் தோஷமில்லாத மார்க்கங்களை யுபயோகப் படுத்தலாமோ, அவ்விதமான மார்க்கங்களைத் தேடி 'மாஹேசுவரன் ஒரு மாயீ' என்ற சுருதியானது விளங்கும் படி செய்ய உலகில் நடித்துக் காட்டினுர் போலும். இந்த ஸமயம் மத்தியதேசத்தில் **அமருகன்** என்ற ஓர் அரசன் பிராண வியோகமானுன். அவன் எல்லா ஐசுவரியங்களையும் பூர்ணமாய்ப் பெற்று, தெய்வ மாதரைப் பழிக்கக் கூடியவர்களாயுள்ள, ஸௌந்தரியவதிகளான ராஜமஹிஷிகளுடன் வெகு ஸுகியாக வாழ்ந்துவந்தான். இவ்வளவு இருந்தும் அவன் தர்மத்தைக் கைவிடாது நீதியுடன் ராஜ்யபரிபாலனம் செய்து வந்ததால்தான், ஸ்ரீபரமசிவனுடைய தேஜஸ்ஸும் அவனது தர்ம சரீரத்தில் பிரவேசித்தது. இவ்விதம் பிரவேசிக்கும் காலத்தில் நமதாச்சாரியர் தமது சரீரத்தை அஹோபில குகையின் துவாரத்தில் ரஹஸ்யமாய் வைத்துவிட்டு, பத்மபாதாதி சிஷ்யர்களைக் காவல் வைத்திருந்தார். ஆச்சாரியருடைய தேஜஸ் அவ்வரசனது சரீரத்தில் பிரவேசித்ததும், இறந்து கிடந்த அவனது சரீரம் எழுந்து உட்கார்ந்தது. இதைக் கண்ட ஜனங்கள் யாவரும் ஆச்சரியத்தையும் ஆனந்தத்தையுமடைந்தார்கள். அன்று முதல் அந்த ராஜ்யம்

முழுவதும் மும்மாரிபொழிய, ஜனங்கள் யாவரும் பேரானந்தத்தைப் பெற்று ஸுகமாய் வாழ்ந்து வந்தார்கள். இஃதிங்ஙன மிருக்க அரசனது பட்ட மஹிஷியானவள் அவரது அதிகமான புத்தி விசாலத்தையும் பேதமான ஸ்வபாவத்தையும் கண்ணுற்று, அவர் முன்னரிருந்த அரசனல்லவோ வென்று சந்தேகித்தனள். பிறகு இவ்விஷ யத்தைப் பிரதான மந்திரியுடன் தனியே ஆலோ சித்தாள். அதற்கு மந்திரியும் அப் பட்டமஹிஷி யைப் பார்த்து "நாம் எவ்வளவோ வைத்தியர் களைக் கொணர்ந்து பார்த்தோம், அவர்களும் இனி அரசன் பிழைக்கமாட்டாரென்று கூறிவிட்டார்கள். பிறகு தாமாகவே அரசன் எழுந்து விட்டார். இப்பொழுது அவரது அமானுஷ்யமான காம்பீரத் தையும், நமது ராஜ்யம் ஸ்வர்க்கத்தைப்போல் நடைபெறுவதையும் நோக்குங்கால், யாரோ ஒரு மஹா புருஷன் மன்னனது சரீரத்தில் பிரவேசித் திருக்க வேண்டும்" என்று கூறினான். மந்திரி யின் வார்த்தைகளைக் கேட்ட பட்டமஹிஷியும் அம் மஹா புருஷனைத் தனது மணவாளனது சரீரத்தி னின்று அகற்றக் கூடாதென நினைத்து, மந்திரி யிடம் உலகில் எவ்விடங்களில் ஜீவனற்ற சரீரங் கள் கிடக்கின்றனவோ அச்சரீரங்களை யெல்லாம் தகனஞ் செய்யுமாறு அரசனுக்குத் தெரியா வண்ணம் ஆக்ஞாபித்தாள். அரசனோ ஏராளமான சௌந்தரிய, ஸௌபாக்கியங்களைப் பெற்ற அந்தப் புரத்தில் வாத்ஸ்யாயன சாஸ்திரங்களைக் கிரஹித் துக் கொண்டு உல்லாஸமாய்க் காலங்கழித்துக் கொண்டிருந்தாலும், தனது கெடுவின் நாளை மாத்திரம் எதிர் பார்த்துக்கொண் டிருந்தார்.

அதற்குள் எல்லாப் பிராணனற்ற சரீரங்களையும் தூதர்கள் கொளுத்திக் கொண்டுவரும் ஸமயத்தில், அஹோபில குகையை யடைந்தார்கள். அவ்விடம் குகையின் வாயிலில் நின்று கொண்டிருந்த சிஷ்யர்களைக் கண்டு ஸந்தேஹத்தினால் உட்செல்ல, அவ்விடம் ஒரு மஹா புருஷனுடைய சரீர மிருக்கக் கண்டார்கள். இவ்வளவில் குருவினது திரு மேனிக்கு ஆபத்து வந்து விட்டதென்ற பயத்துடன், பத்மபாதர் முதலிய சிஷ்யர்கள் அமருகனுடைய அந்தப்புரத்தினருகில் பிக்ஷுக வேடந் தரித்துப் பின்வரும் அர்த்தத்தைக் கொடுக்கும்படியாகப் பாடினார்கள். "இப்பொழுது தோன்றுவது தங்களுடைய ஸ்வரூபமல்ல. தாங்கள் நித்யமான தத்வஸ்வரூபமல்லவா?" அச் சந்தர்ப்பத்தில் பட்டமஹிஷியால் அன்புடன் கொடுக்கப்பட்ட தாம்பூலத்தை இறைவன் வாயில் அடக்கிக் கொண்டிருக்கின்றார். வெளியில் பாடியது தனது சிஷ்யர்களுடைய குரலென வறிந்து திடீரென அச்சரீரத்தைவிட்டு நமதாச்சாரியர் ஸ்வசரீரத்தையடைந்தார். ஆச்சாரியருடைய சரீரத்திலோ கை வரையில் அக்னி பட்டு எரிந்து போயிருந்தது. இதைக் கண்ணுற்ற சிஷ்யர்கள் கண்ணீர் பொழிந்து கதற ஆச்சாரியர் 'लक्ष्मीनृसिंह ममदेहि करावलम्बं' என்று லக்ஷ்மீ நரஸிம்மனைத் துதிக்க அவரும் பிரத்தியக்ஷமாகி, ஸ்ரீ தேவியின் கடாக்ஷத்துடன் தனது அமிருதங்களால் ஆச்சாரியரைத் தடவிக்கொடுக்க, அவரது தேஜோமயமான சரீரமும் மறுபடி உண்டாகிவிட்டது. அச்சமயம் ஆச்சாரியமூர்த்திகளுடைய ஹஸ்தத்தில் ஒரு ஸாலக்ராமம் அனுகிரஹிக்கப் பட்டதென ஓர் ஐதிஹ்யமுண்டு.

அந்த ஸாலக்ராமத்தையே இன்றைக்கும் ஸ்ரீ ஆச்சாரிய பீடத்தில் பூஜிக்கிறார்கள். பிறகு திவ்யதேஜோமயமான சரீரத்துடன் ஸ்ரீ சங்கர மூர்த்திகள் ஸ்ரீ நரஸிம்மரிடத்தில் விடைபெற்று, காஞ்சிபுரத்தை யடைந்தார். ஸ்ரீ ஸரஸ்வதி தேவி யும் நமது குருமூர்த்திகள் திரும்பி வருவதைக் கண்ட மாத்திரத்தில் தான் ஜயிக்கப்பட்டுப் போனதாய்த் தீர்மானித்து விட்டாள்.

### ஸரஸ்வதி பட்டத்தையும் இந்திர பட்டத்தையு மடைதல்

பின்னர் வலுவில் தானாக வாதத்திற்கு இழுத் துத் தோற்றுப்போனமையால், வெட்கிய ஸரஸ்வதி தனது ஸ்தானத்தையும் பெயரையும் காணிக்கை யாய் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று ஸ்ரீ குருவி னிடம் ஸமர்ப்பித்தாள். ஸ்ரீ குருநாதரும் ஸரஸ்வதி யென்ற பட்டத்தையும் தரித்தார். இன்றும் ஸ்ரீ காமகோடி பீடத்தின் ஆச்சார்யாளுக்கு அப்பட்ட மிருக்கக் காண்கிறோம். இதுவுமல்லாது இந்திரா என்கிற பட்டமும் அவர்களுக்கு ஏற்பட்டிருக் கிறது. ஒரு ஸமயம் ஸ்ரீ சுரேசுவராச்சாரியருக்கு சிரஸில் ஒரு ஸ்போடம் (கட்டி) உண்டாயிற்று. எவ் வைத்தியம் செய்தும் அது குணப்படவில்லை.

---

ஸ்ரீ மாதவிய சங்கர விஜயத்தில் 'प्रणम्यपरमात्मानं' என்ற ஓர் அனுஷ்டுப் சுலோகம் ஆரம்பத்தில் தென்படுவதால் அக்கிரந்தம் மாதவரென்கிற வித்யாரண்யர் செய்ததாக நினைக்க வேண்டியிருக்கிறது. ஆயினும் முதல் ஸர்க்கத்தின் பின் சுலோகத்தின் நடைக்கும் விருத்தத்திற்கும் ஒட்டவில்லை. இன்னும் அந்த ஸர்க்கத்திலேயே 'नवकालदासविदुषः... धेनुस्तुरुष्क' என்ற சுலோகத்தினால் தனக்கு அபிநவ காளி

உடனே நமதாச்சாரியாளும் அசுவினி தேவ தைகளை வரவழைத்தார். அவர்கள் வந்து ஸுரேச்வராச்சாரியருடைய உபாதியைக் குணப் படுத்துங்கால் தனது உத்திரவைப் பெற்றுக் கொள்ளாது அசுவினி தேவதைகள் பூலோகம் சென் றிருந்ததனுல் இந்திரன் கடுங்கோபங்கொண்டு, தனது வஜ்ராயுதத்தை பூலோகத்தில் ஏவினுன்.

---

தாஸனென்ற பட்டமிருப்பதாக அந்தக் கிரந்த கர்த்தா சொல்லிக் கொள்ளுகின்ருர். மேற் சொல்லிய பட்டம் வித்யா ரண்யருக்கு உள்ளதாக எந்தக் கிரந்தத்திலுமில்லை. வித்யா ரண்யரின் இதர கிரந்தங்களிலுமுள்ள நடையும் இதில் இல்லை. ஆனுல் பாகவத சம்பூ என்னும் கிரந்தத்திலுள்ள நடை இச்சங்கர விஜயத்தி லமர்ந்திருக்கிறது. அந்த பாகவத சம்புவை இயற்றிய மாதவருக்கு அபிநவ காளிதாஸரென்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது. அது எங்ஙன மிருப்பினும் "धन्योऽव्यासाचलकविवर: तत्कृतिज्ञाश्च:" என்ற அம்மாதவ ருடைய வசனத்திஞல் தனக்கு மூலம் வியாஸாசலீய சங்கர விஜயம் என்று சொல்லியிருக்கிருர்.

இவ்விதம் அனேக சங்கர விஜயக்காரர்கள் வியாஸாசலரையே தங்களுக்கு மூலமாகப் போற்றி யிருக்கிருர்கள். கேரளீய சங்கர விஜயத்திலும் सर्वागमास्पदं वेदव्यासाचलमिमं कविम् । बभूवशंकराचार्यकीर्तिकल्लोलिनी यत: ॥ என்று வியாஸாசலர் துதிக்கப்பட்டிருக்கிருர். அம்மூலமான வியாஸாசலசங்கர விஜயத்திலும் ஆனந்தகிரீயம், சிவரஹஸ்யம், கேரளீயம் இவை களிலும் பரகாயப்பிரவேசம், ஸரஸ்வதிவிஜயம், ஸர்வக்ஞ பீடாதிரோஹணம், மஹா கைலாயப் பிரவேசம் இவைகள் முக்தி க்ஷேத்திரமான காஞ்சி நகரத்திலேயே நடைபெற்றதென நன்ருய்த் தெரிகின்றது. கி. பி. 788-வது வருஷம் காமகோடி பீடத்தில் வீற்றிருந்த தீரசங்கரேந்திரர் என்ற ஆச்சாரியர் காச்மீரம் சென்று அவ்விடம் தத்தாத்ரேய குஹாப் பிரவேசம் செய்வித்ததை ஆதிஆசாரிய சங்கரவிஜயத்திலும் சேர்த்தும் சங்கரருக்கு வெகுகாலம் பின்னிருந்த மயூரகவி, ஸ்ரீஹர்ஷ

அவ்வஜ்ராயுதம் நம் ஆச்சாரிய ஸன்னிதானத்தை யடைந்தவுடன் இந்திரனது கையானது அங்ஙனமே அசைவற்று நின்றுவிட்டது. வஜ்ராயுதமும் கீழே விழுந்து பொடியாயிற்று. இந்திரன் உடனே ஆச்சாரியாளை சரணுகதி யடைந்து பிரார்த்திக்குங்கால், நமது கருணுமூர்த்தியான ஆச்சாரியர் அவனை க்ஷமித்து வஜ்ராயுதத்தையும் புனருத்பத்தி செய்வித்து அவனிடம் கொடுத்து ரக்ஷித்தார். பின்னர் இந்திரனும் ஆச்சாரிய மூர்த்திகளைப் பார்த்துத் தனது ஸாம்ராஜ்யங்களையும் பெயரையும் அங்கீகரிக்கும்படி வேண்ட, அதற்கிணங்கி அவ்விந்திரப் பட்டத்தைப் பெற்று அதற்கேற்பட்ட ஐசுவரியங்களையும் பிருதுகளையும் வகித்தார். தர்ம ரக்ஷுர்த்தம் ஏற்படுத்தப் போகும் ஸ்ரீகாமகோடி பீடத்தின் முதலாச்சாரியரான ஸ்ரீசுரேசுவராச்சாரியருக்கு நமது குருமூர்த்தி அவ்விந்திரப் பட்டத்தை யளித்தார். அன்று முதல் இன்றைக்கும் காமகோடி பீடத்தின் ஆச்சாரியாள் அவ்விந்திர பட்டத்தை வகிக்கின்ருர்கள். ஸ்மிருதிகளுங்கூட இந்திரஸ்தானத்துடன் கூடிய ஸன்யாஸத்திற்குப் பூர்ண சக்ரவர்த்தியினுடைய சின்னங்கள் ஏற்பட்டிருக்குமெனக் கூறுகின்றன. இவ்விஷயத்தையே வாஸனு தேகஸ்துதி கூறுகின்றது.

---

னென்னும் நைஷதகவி இவர்களை யெல்லாம் நம் சங்கர குருமூர்த்திகள் ஜயித்தார் என்றும் கூறி யிருத்தலால் அந்த அபிநவகாளிதாஸர் ஸ்ரீசங்கராசார்ய மூர்த்திகளின் கதையை ஸ்ரீராமாயணத்தை ஜானகீ பரிணயம் முதலியவைகளில் மாற்றியிருப்பதுபோல் கவிசாதுர்ய லக்ஷணங்களால் மாற்றி யிருப்பதாகத் தெரிகிறது.

योवैमण्डनमिश्र विद्वदधि पश्यापाद्यसन्यासितां
तन्मूर्ध्निव्यसनापनोदन विधावाकर्षयन्नश्विनी ।
भैषज्यंकलयाम्बभूव कुपितस्येन्द्रस्यवज्रायुधं
चूर्णीकृत्य पुनर्ददौ हरिपदे चक्रेतमेनंभजे ।

இந்த ஸ்துதியின் கடைசியான ஸ்தோத்திரமானது

आचार्य शिष्यसंघस्त्वभिमतं वासनादेहरूपं
श्रीशंभोदीनबंधो कथमिव भवतो देह आसीद्विचित्रं ।
श्रुत्वातद्वाक्यमार्यो मधुरनरगिरामू चयन्नतरंगात्
भक्तं भृत्यं प्रसन्नं स्वजनमनु महावाक्यसारं जगाद ॥

என்ற விதமாய்க் கூறுகிறது.

ஸரஸ்வதி தேவியை ஜயித்தவுடன் பரத கண்டத்தின் எல்லாத் திக்குகளிலுமிருந்தும் வந்து கூடியிருந்த இதர மதத்தினர்களைத் தமது லீலா மார்க்கத்தினால் ஜயித்துவிட்டார். வேதங்களுக்கு சிரஸான வேதாந்த சித்தாந்தத்தை ஜீவலோகங்களில் மோக்ஷார்த்தமாய்ப் பிரதிஷ்டை செய்வித்தார். அந்த நிர்விகற்ப ஆத்ம ஞானத்தை யடைய ஈசனது அநுக்கிரஹத்தைத் தவிர வேறு எவ்வழியும் சாத்திய மில்லாததால், வேதங்களால் அங்கீகரிக்கப்பட்ட ஒரே ஈசனுடைய ஆறு மூர்த்தி பேதங்களில், எந்த மூர்த்தியை உபாசித்தாலும் அம்மோக்ஷ ஞானத்தை யடையலாமென்று, நிஷ்பக்ஷமாக ஷண்மதங்களையும் ஸ்தாபித்தார். சைவமதம், வைஷ்ணவமதம், கௌமாரமதம், பராசக்திமதம், ஸௌரமதம், காணாபத்தியமதம் இவ் ஆறு மதங்களிலும் எம்மதத்தை யனுசரித்தாலும் மோக்ஷத்திற்கு அழைத்துப் போகுமென்றும்,

ஆயினும் அவரவர்களுடைய பெரியோர்கள் எந்த மதங்களை யனுஷ்டித்து வந்தார்களோ அவ் வழியையே நாம் பின்பற்ற வேண்டுமென்று முரைத்தார். வேதமார்க்கத்தை யனுசரித்து நம தெல்லா மதங்களுக்குமே விரோதமாய்க் கிளம்பி யிருந்த பௌத்த நாஸ்திகாதி மதங்களை யொழித்து, அனாதியான வேதத்தையும் ரக்ஷித் தார். இன்னும் எவரும் வேதத்தில் சொல்லிய எத்தெய்வத்தையும் பேதமின்றி உபாஸிக்கலாம் என்றும் உபதேசித்தார். இவ்விதம் ஸ்ரீசங்கர பகவத்பாத மூர்த்திகள் தமது முப்பத்திரண்டு வயதிற்குள் உலக முழுவதும் சுற்றிக் கைலாஸஞ் சென்று யோக, மோக்ஷ, முக்தி, வர, போக என்ற ஐந்து லிங்கங்களைக் கொணர்ந்து, அதில் முதன்மையான யோகலிங்கத்தைத் தமது ஆத்ம பூஜைக்காக வைத்துக்கொண்டு, பாக்கி நான்கை யும் முறையே ஸ்ரீசிதம்பரத்திலும், பதரீகாச்ரமத் திலும், நேபாளத்திலுள்ள ஸ்ரீநீலகண்ட க்ஷேத்தி ரத்திலும், சிருங்ககிரியிலும் ஸ்தாபித்து, அக் காலத்திலிருந்த எழுபத்திரண்டு துர்மதங்களையும் கண்டித்து, பதரியில் ஜ்யோதிர்பீடத்தையும், துவாரகையில் காளிகாபீடத்தையும், ஜகன்னாதத் தில் விமலாபீடத்தையும், சிருங்ககிரியில் சாரதா பீடத்தையும் ஸ்தாபனஞ்செய்து, பிறகு ஸ்ரீகாம கோடி பீடஸ்தானமாகிய காஞ்சி க்ஷேத்திரத்தை யடைந்து, மன்னர் மன்னர்கள் சூழ, அஷ்டாதச வாத்தியம் முழங்க, ஸநந்தனர் ஹஸ்தலாகவம் கொடுக்க, கோடிக் கணக்கான சிஷ்யர்கள் கை கூப்பி நிற்க, ஸரஸ்வதி தேவியின் முன்னிலையில் பரதேவதையின் ஆக்ஞைப்படி ஸர்வக்ஞபீடாதி

ரோஹணம் செய்த வைபவத்தை நாம் நமது ஸ்தூலக்கண்களால் பார்க்காவிடினும், மனமென் னும் ஸூக்ஷ்ம நேத்திரத்தினுல் தியானிக்கும் பொழுது மயிர்க்கூச்சலிட்டுப் பேரானந்த சித்ஸ்வ ரூபத்தை யடைகின்ருேம்.

இந்த ஆறு உபாசன மூர்த்திகளின் அநுக் கிரஹத்தினுலும் பக்தர்கள் ஆத்மஸ்வரூபானந்த ஞானம் பெற்று, வேதத்தின் நடுநாயகமான மஹாவாக்யத்தின் தத்துவத்தையு மறியும்படி யநுக்கிரஹித்தார்.

---

## அத்தியாயம் 11

### ஸங்க்ஷேபகாச்சாரியர்

இவ்விதம் நமது ஸ்ரீ சங்கர குருமூர்த்திகள் ஸர்வக்ஞபீட மேறுங்கால், நமது பாரத பூமியின் தென்கோடியிலுள்ள ஸ்ரீ தாம்பரபர்ணி நதியின் தீர்த்தத்தினின்று சில வித்வான்கள் வாதத்திற்

---

கொச்சின் ஸ்டேட் மானுயலில், ஸ்ரீ பகவத் ஆதி சங்கரா சார்யாளுடைய சாக்ஷாத் சிஷ்ய பரம்பரையாக சில மடங்கள் கேரள தேசத்தில் இப்பொழுது இருப்பதாக காணப்படுகிறது. அவைகளில் ஒன்று "நடுவிலே மடம்" (மத்ய மடம்) என்று கூறப்படுகிறது. கல்கத்தாவில் வெளியிடப்பட்ட 'Light of the East' என்னும் பத்திரிகையில் Volume 11இல், வடக்கே ஹிமோத்கிரி பக்கத்தில் பதரிகாச்ரம ஜோஷி மடத்தைத் தவிர கங்கோத்திரியில் ஸ்ரீ ஆசார்யாள் இன்னெரு மடம் ஸ்தா பித்ததாக சொல்லப்படுகிறது.

காசியில் பாதுகா மடம் என்று ஒன்று இருக்கிறது. அது ஸ்ரீ பகவத் பாதாள் கால முதல் அவர்கள் பரம்பரையாக காசி பிரபுக்களாலும், பண்டிதர்களாலும் ஆதரிக்கப்பட்டு வரு கிறது.

காக வந்திருந்தார்கள். ஆனால் நமது குரு மூர்த்தியோ அனேகமாயவர்களில் யாவரையும் வென்றுவிட்டார். ஆறு வயதுள்ள ஒரு குழந் தையை மாத்திரம் சீக்கிரத்தில் ஜயிக்க முடியாமல், சில நாட்கள் தொடர்ந்தே வாதாடும்படி ஏற் பட்டது. பிறகு அக்குழந்தையும் வாதத்தில் தோற்றுப்போக, அதன் புத்தியின் விசாலத்தைக் கண்டு, ஆனந்தமடைந்து, அதற்கப்பொழுதே ஸந்யாஸங் கொடுத்து, "ஸர்வக்ஞன்" என்ற திருநாமத்தையுமிட்டுத் தமது பீடமாகிய ஸ்ர்வக்ஞ பீடத்தின் ஸ்தானத்திலும் அமர்த்தினர். அச் சமயம் ஸ்ரீ ஸுரேச்வராச்சாரியர் ஸ்ரீ காமகோடி பீடத்தின் அதிபதியாகவிருந்தும் அன்னவர் கிரஹஸ்தாசிரமத்தினின்று ஸந்யாஸம் பெற்ற தால், குருமூர்த்தியின் ஆத்ம பூஜையான யோகலிங்க சந்திரமௌளியைப் பூஜிக்க முடிய வில்லை. ஆகவே பிரம்மசரியத்தினின்றும் ஸந் யாஸம் பெற்ற "ஸங்க்ஷேபகாச்சாரியர்" என்னும் மற்றொரு பெயருள்ள இந்த ஸ்ரீ "ஸர்வக்ஞரே" பூஜை செய்து வந்தார். இன்றும் ஸ்ரீ காமகோடி பீடத்தில் பிரம்மசர்யத்தினின்று ஸந்யாஸம் பெற்ற ஆசார்யர்கள் தவிர வேறெவரும் ஸ்ரீ யோக லிங்கத்தைத் தொடுவதில்லை. ஸ்ரீ ஸுரேச்வ ராச்சாரியருக்குப் பிறகு அந்த ஸர்வக்ஞராம் ஸ்ரீ சரணர்களே காமகோடி பீடாதிபதியானர்கள். ஸ்ரீ ஸுரேச்வராச்சாரியர், ஸ்ரீ காமகோடி பீடாதி பதிகளா யிருந்ததோடு, இதர எல்லாப் பீடங் களுக்கும் குருஸ்தானமாகவு மிருந்தாரெனத் தெரி கின்றது. அதைக் கொண்டே ஸ்ரீ துவாரகை, சிருங்ககிரி முதலிய இடங்களின் பரம்பரைகளி

லும்கூட, சுரேச்வராச்சாரியரையே தங்களது முதலாச்சாரியராக வரைந்திருக்கின்றனர்.

அக்காலத்தில் காஞ்சி நகரத்தில் ஸுரேச்வரர் ஓர் அக்கிரகாரத்தை ஏற்படுத்தினர். இன்றைக்கும் அவ்வக்கிரகாரம் அவரது பிரசித்தமான பூர்வாசிரமப் பெயருடன் "மண்டநமிச்ர அக்ர கார" மென்று வழங்கி வருகிறது. இவ்விஷயங்களையே சுருக்கமாக வியாஸாசலீய சங்கர விஜயம் கூறுகிறது.

"एवं निरुत्तरपदां स विधाय देवीं
सर्वज्ञपीटमधिरुह्य मठेस्वलब्धे।

माला गिरामपि तथोपगतैश्चमिलैः
संभावितः कमपि कालमुवास काञ्च्याम्।

प्रागष्टमाद्विदित वेद्यममूढबाल्यम्
सर्वज्ञसंज्ञमथहंसितमात्मनैव॥

श्रीकामकोटि बिरुदे न्यदधात्स्वपीठे
गुप्तं स्वशिष्यतिलकेन सुरेश्वरेण॥

इत्थं च शंकरगुरुः कृतकृत्य भावात्
शावान्प्रकाश्य निगमान्तगिरांनिरूढाम्॥

काञ्च्यां विमुच्य वपुरी दृढमिच्छयैव
स्वस्यैव धाम्नि परमे स्वतएव लिल्ये॥

இவ்விதம் லோகானுக்ரகார்த்தம் புவியிலவதரித்து, ஜனங்களின் மனதைக் கவர்ந்து கொண்டிருந்த துர்மதங்களாகிய இருளை அத்வைதமதமென்ற தம் காந்தியால் கண்டித்து, தம்மால் நிலை

நாட்டப்பட்ட அத்வைதம் நம் பரதவர்ஷத்தில் நீடித்து நிற்குமாறு செய்து ஸ்ரீ காஞ்சி க்ஷேத்ரத்தில் ஸ்தூலஸ்வரூபத்தை, சூக்ஷ்மத்திலும் சூக்ஷ்மத்தை காரணத்திலும் நிறுத்தி அகண்ட சைதன்யஸ்வரூபமாக நின்று இன்றும் சான்னித்யத்துடன் விளங்குகிறார்.

जयतु जयतु काञ्ची कामकोटचाख्यपीठी
जयतु जयतु लिङ्ग चन्द्रमौलीशसंज्ञम् ।
जयतु जयतु कामं शारदाश्रीमठेयं
जयतु जयतु भूभौ श्रीमहादेवनामा ॥

---